تاميلي
للمسلمين

سلسلة الهداية (6)

# ஆன்மீகப் போராட்டமும் அழுகை நிறைந்த சம்பவங்களும்

## واقعة الطف



அஷ்-ஷெய்க் அப்துல் ஹலீம் - கும்மி

# ஆன்மீகப் போராட்டமும்
# அழுகை நிறைந்த சம்பவங்களும்




——————— அஷ்ஷெய்க் அப்துல் ஹலீம் கும்மி




الطبعة الأولى

١٤٢٨هـ - ٢٠٠٧م

# ஆன்மீகப் போராட்டமும் அழுகை நிறைந்த சம்பவங்களும்

ஆசிரியர் : அஷ்ஷெய்க் அப்துல் ஹலீம் கும்மி

முதலாம் பதிப்பு : 2003, மார்ச்சு
பிரதிகள் : 1000
கணினி வடிவமைப்பு : ஸபீர் ஹாபிஸ்
விலை : 100/=

# Aanmeehap Poorattamum Azhuhai Nirainthai Sambavankalum

Author : Ash-shaik Abdul Haleem (Qummee)
Valaichchenai.

1st Edition : 2003, March
Copies : 1000
Typesetting : Safeer Hafis
Price : 100/=

*Published By :* *AL - KAUSER SOCIETY of Sri lanka.*
*118 Keels Housing Scheme*
*Endere Mulle*
*Wattala*
*ISBN - 955-8865-001*

ஆண்டுதோறும்
முஹர்ரம் 09ம், 10ம்
நாள் மிகவும்
சோகமாகவும், துக்கமாகவும்
அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றது.
தாசூஆ, ஆசூறா தினங்கள் என
இவைகள் அழைக்கப்படுகின்றது.

இந் நாட்களில் சோதனைக்களமாக
காட்சியளித்தது கர்பலாக் களமாகும்.
இதில் ஒருவர் பின் ஒருவராக இமாம்
ஹுஸைன் உட்பட சுமார் 72 பேர் வீர
மரணம் அடைந்தனர். இவர்களில்
ஹஸ்ரத் ஹுசைன் (ரலி) அவர்களின்
மிக நெருங்கிய உரவினர்களும்
களத்தில் மிக பரிதாபகரமாக உயிர்
நீத்தவர்கள நிகழ்வுகள் இங்கு
தரப்படுகின்றன. முஸ்லிம்
சமூகத்தின் தியாகம் இஸ்லாமிய
விழுமியங்கள் அறநெறிகள்
ஆகியவற்றிக்கு இவை
வலுவூட்டும் என
எதிர்பார்க்கின்றேன்.

# சமர்ப்பணம்

தியாகச் செம்மல் இமாம் ஹுஸைன்
அவர்களுக்கு.

# அணிந்துரை

*மேற்கத்தியவாதிகளின் சூழ்ச்சிகளுக்கும், சதிகளுக்கும் இஸ்லாமிய உலகம் முகங்கொடுத்து சவால்களை எதிர் கொண்டிருக்கும் இக்காலகட்டத்தில் அஷ்ஷெய்க் அப்துல் ஹலீம் அவர்களின் "ஆன்மீகப் போராட்டமும் அழுகை நிறைந்த சம்பவங்களும்" என்ற இச்சிறிய நூல் வெளிவருகின்றது. அஹ்லுல்பைத்துக்களான இறுதித் தூதர் முஹம்மது (ஸல்) அவர்களின் பரம்பரையினரின் வீரத் தியாகங்களே இஸ்லாமிய மறுமலர்ச்சிக்கு பல்வேறு காலகட்டங்களில் வழியமைத்து வந்துள்ளதை இஸ்லாமிய வரலாறு தெளிவுபடுத்துகின்றது. குலபாஉர்ராஷிதூன்களுக்குப் பின்னர் உருவான வம்ச ஆதிக்க உணர்வானது இஸ்லாமிய விழுமியங்களை அழித்து ஆதிக்க உணர்வையும், அரசியல் அதிகார ஆணவத்தினையும் மேலோங்க வைத்தது. அதிலிருந்து இஸ்லாத்தைக் காப்பாற்றுவது அஹ்லுல்பைத்துக்களான ரசூலுல்லாஹ்வின் குடும்பத்தினரின் கடமை என்பதை அவர்கள் உணர்ந்தார்கள். அதற்காகத் தமது இன்னுயிர்களை தியாகம் செய்யவும் அவர்கள் தயாரானார்கள்.*

*இஸ்லாமிய வரலாற்றில் 'கர்பலா' துக்க நிகழ்வானது, ஒவ்வொரு ஆண்டும் நினைவுகூரப்படுவதன் மூலம் புத்துணர்வையும், புதிய சிந்தனைகளையும் உருவாக்கி இஸ்லாமிய மறுமலர்ச்சிக்கு வழியமைக்கின்றது. கர்பலாக் களத்தில் உமையா வம்ச ஆட்சியாளன் எஸீதின் உத்தரவின் பேரில் பெருமானார் (ஸல்) அவர்களது குடும்பத்தினர் அழிக்கப்பட்டார்கள். அவர்களது உலோகாதய ஆட்சியை எதிர்த்து இஸ்லாமிய ஆட்சியை உருவாக்க வேண்டும் எனவும் இலட்சியத்தில் பெருமானாரின் அருமைப் பேரர் இமாம் ஹுஸைன் (அலை) அவர்களின் உயிர்த்தியாகம் சிறப்புற்று நிற்கின்றது. ஒவ்வொரு ஆண்டும் அத்தியாகத்தின் மேன்மை சர்வதேச ரீதியில் நினைவுகூரப்பட்டு முஸ்லிம்களது உணர்வுகள் புதுப்பிக்கப்படுகின்றன. இதனை மல்லினப்படுத்துவதற்காக எகூதி, நஸாராக்களின் வலையில் சிக்கிய பல முஸ்லிம்கள் முனைந்தாலும் அது வெற்றியடைவதில்லை.*

*பெருமானார் (ஸல்) அவர்களைப் பற்றியும், அவர்களது குடும்பத்தினரின் மேன்மை பற்றியும் மிக நீண்ட காலமாக பல நிகழ்வுகள் இலங்கையில் இடம்பெற்று வந்துள்ளன. எகூதி, நஸாராக்களின் வலையில் சிக்கியவர்களின் பிரசாரங்கள் காரணமாக படிப்படியாகக் குறைவுபட்டு வந்துள்ளன. அதனைக் கவனத்திற் கொண்ட நாம், அவ்வாறான நிகழ்வுகள் மறையக் கூடாது என்பதற்காக "முஹர்ரம் - ஆஷுரா" நிகழ்வுகளை நினைவுகூருவதன் மூலமும், முஸ்லிம்களுக்கிடையே ஏற்பட்டுள்ள கருத்துச் சிந்தனைகளின் முரண்பாட்டை நீக்குவதற்கு கருத்தரங்குகள் மூலமும் வழியமைத்து வருகின்றோம். இவ்வாறான ஒரு முயற்சியின் வெளிப்பாடே இந்நூலாகும்.*

*அஷ்ஷெய்க் அப்துல் ஹலீம் அவர்கள் இச்சிறு நூலை ஆக்கும்போது உண்மையான தியாகத்தின் மகத்துவத்தினை தெளிவுபடுத்த உண்மைச் சம்பவங்களை மனம் உருகும் வகையில் முன்வைக்கின்றார். நூலாசிரியர் இத்துறையில் ஆழ்ந்த புலமையுடையவர். அஹ்லுல்பைத்துக்களை கண்ணியப்படுத்தும் மக்களுடன் வாழ்ந்து நீண்ட அனுபவம் உடையவர். அதனால் அவரது ஆக்கம் காத்திரமானது. "எமது முஹர்ரம் ஆஷுரா" பற்றிய ஒன்பதாவது மகாநாட்டில் இந்நூலை வெளியிடுவதில் நாம் மகிழ்ச்சியடைகின்றோம்.*


கலாநிதி மௌலவி கே.எம்.எச். காலிதீன்

**பணிப்பாளர், இஸ்லாமிய ஆய்வு நிலையம்.**

**தலைவர், அகில இலங்கை கதீப்மார்கள் சம்மேளனம்.**

**பீடாதிபதி, தென்கிழக்குப் பல்கலைக்கழகம்.**

# என்னுரை

*எல்லாம் வல்ல அல்லாஹ்வின் பேரருளால்;*

*அல்லாஹ்வைத் தவிர அனைத்திற்கும் ஆதியும் அந்தமும் உண்டு. இதில் மனிதனும் விதிவிலக்கானவன் அல்ல. மனிதர்கள் தோன்றுகின்றார்கள்; மறைகின்றார்கள். இவர்களில் சிறப்பாக தம் வாழ்வை அமைத்துக் கொண்டவர்கள், மனிதப் புனிதர்களாக புகழப்படுகின்றார்கள். இவ்வரிசையில் றசூல்மார்கள், நபிமார்கள், இமாம்கள், வலிமார்கள், ஸாலிஹீன்கள், உலமாக்கள், பெரியோர்கள், நல்லோர்கள் என பல வகையினர் உள்ளடக்கப்படுகின்றனர். அனைவருக்கும் ஆரம்பமும், முடிவும் இருந்தன. இவர்கள் அனைவருள்ளும் பெருமானார் (ஸல்) அவர்கள் முதன்மையான சிறப்பு மிக்கவர்களாகத் திகழ்கின்றார்கள். அவர்களது சொல், செயல், தியாகம், வணக்கவழிபாடு, பிறர் துன்பம் துடைக்கும் உயரிய பண்பு, நல்லொழுக்கம் என அனைத்து குணநலன்களும் பெற்று அனைவருக்கும் முன்மாதிரியாக வாழ்ந்து காட்டினார்கள்.*

*இவ்வாறு நபி (ஸல்) அவர்கள் சிறப்பும் முக்கியத்துவமும் பெறுகின்ற போது, அவர்களது குடும்பத்தினராகிய அஹ்லுல் பைத்தினரும் அச்சிறப்புகளில் பங்குடமை பெறுவதற்குத் தகுதி வாய்ந்தவர்களாக இருக்கின்றார்கள் என்பது உறுதியான விடயமாகும். "(நபியுடைய) வீட்டினரே! அல்லாஹ் நாடுவதெல்லாம் உங்களை விட்டும் சகல அசுத்தங்களையும் போக்கி, உங்களை முற்றிலும் பரிசுத்தமாக்கி வைக்கவே!" (33:33)*

*"உங்களிடம் இரு முக்கிய விடயங்களை விட்டுச் செல்கின்றேன். அவற்றில் ஒன்று அல்குர்ஆன்" என்று கூறிய நபியவர்கள், அல்குர்ஆனின் சிறப்புகள், தன்மைகள் பற்றி எடுத்துரைத்தார்கள். அதன்பின், "இரண்டாவது எனது குடும்பமாகிய அஹ்லுல் பைத்" எனக் கூறி, "எனது குடும்பத்தினர் விடயத்தில் உங்களுக்கு நான் அல்லாஹ்வை ஞாபகமூட்டுகின்றேன்" என மூன்று விடுத்தம் முக்கியத்துவப்படுத்திக் கூறினார்கள்.*

இயல்பாக, மரணம் அனைவருக்கும் ஏற்படுகின்றது. அனேகமானவர்களின் மரணம் இத்தகையதாகவே அமைகின்றது. ஆயினும், சில குறிப்பிட்டவர்கள் மாத்திரமே, மரணத்தை எதிர்கொண்டு, முன்சென்று அதனை அரவணைத்துக் கொள்கின்றார்கள். இவ்வாறு மரணிப்பவர்கள் பற்றி பிரஸ்தாபிக்கும் அல்லாஹ், "இத்தகையோர் மரணிப்பதில்லை. அவர்கள் உயிரோடு வாழ்ந்து கொண்டிருக்கின்றார்கள்" என்று கூறுகின்றான்.

"இன்னும் அல்லாஹ்வின் பாதையில் கொல்லப்பட்டவர்களை மரணித்தோர் என நீங்கள் கூற வேண்டாம். மாறாக, அவர்கள் உயிரோடிருக்கின்றார்கள். எனினும் நீங்கள் அதனை உணர்ந்து கொள்ள மாட்டீர்கள்" (02:154)

தியாகச் செம்மல் இமாம் ஹுஸைன் அவர்கள் இவ் இறைவசனத்தின் முழுவடிவிலான அடையாளமாகவே வாழ்ந்து காட்டினார்கள். இதனாலேயே அவர்களைப் பற்றிய நூல்களும், காவியங்களும், கவிதைகளும் பரவலாக உலகில் தோன்றிக் கொண்டிருக்கின்றன. பல அறிஞர்கள் இமாமவர்களின் இவ்இஸ்லாமிய எழுச்சியை பல கோணங்களில் ஆய்ந்து, பல்வேறு முடிவுகளைக் கண்டு, அவர்களது எழுச்சியின் படிமுறைகளும், நிகழ்வம்சங்களும் எக்காலத்திற்கும் பொருந்தும் வரம்பெற்றவையே என்பதை ஊர்ஜிதம் செய்துள்ளனர். எனினும், தமிழ்கூறும் நல்லுலகைப் பொறுத்தவரை இமாம் ஹுஸைன் தொடர்பாக எழுதப்பட்டுள்ளவை மிகச் சொற்பமானவையே என்றுதான் கூற வேண்டியுள்ளது.

சமகால தத்துவாசிரியர்களில் ஒருவரான ஷஹீத் முர்தஸா முதஹ்ஹரி அவர்கள் இமாம் ஹுஸைனின் கர்பலா நிகழ்வுகளை தத்துவார்த்தக் கண்ணோட்டத்தில் ஆய்ந்து "ஹமாஸயே ஹுஸைனி" எனும் பாரசீக நூலினை எழுதி வெளியிட்டார்கள். அந்நூல் அச்சிடப்பட்டு வெளிவந்த போது, பலத்த விமர்சனங்களுக்குள்ளாக்கப்பட்டது. குறிப்பாக, இந்தியா, பாகிஸ்தான் போன்ற நாடுகளில் வாழ்ந்த சில

முஸ்லிம்கள் இதனை கடுமையாக விமர்சித்தனர். இமாம் ஹு"ஸைனின் கர்பலா எழுச்சி வரலாற்றில் பல புனைகதைகளும், பொய்ப் பிரசாரங்களும் சேர்க்கப்பட்டு, இமாமவர்களை ஞாபகிக்கையில் மக்களுக்கு அழுகையும் கவலையும் ஏற்பட வேண்டும் என்பதற்காக பல கட்டுக்கதைகளும் உருவாக்கி விடப்பட்டிருந்ததை இந்நூல் சுட்டிக் காட்டிக் கண்டித்தமையே இத்தகைய விமர்சனங்களுக்குக் காரணமாகும்.

இன்றும் கூட சில முஸ்லிம்கள், தொழுகை, நோன்பு முதலான பர்ழான விடயங்களை விட்டு விட்டு, முஹர்ரம் மாதத்தில் இமாம் ஹு"ஸைனின் ஷஹாதத்தை நினைந்து கவலையுற்றுக் கண்ணீர் வடித்துக் கதறியழுவதன் மூலமும், யாஹு"ஸைன்-யாஹு"ஸைன் என நெஞ்சில் அடித்து ஒப்பாரி வைத்து அழுவதன் மூலமும் நன்மையை தேடிக் கொள்ளவும், குற்றங்களுக்குப் பரிகாரம் தேடிக் கொள்ளவும் முனையும் கசப்பான நிகழ்வுகள் நடந்து கொண்டுதான் இருக்கின்றன என்பதை யாரும் மறுக்க முடியாது. இவையெல்லாம் மார்க்கத்திற்கு முற்றிலும் புறம்பான விடயங்களாகும் என்பதை அந்நூல் தெளிவாக நிறுவிக் காட்டியது.

தற்போது உங்கள் கைகளில் தவழும் "ஆன்மீகப் போராட்டமும், அழுகை நிறைந்த சம்பவங்களும்" எனும் இந்நூல், நீண்ட ஆய்வினதும், தேடலினதும் வெளிப்பாடாகும். எனது ஒழுக்கவியல் ஆசான்களான உஸ்தாத் மழாஹிரி, மற்றும் பன்னூலாசிரியர் உஸ்தாத் ஜ.்.பர் அல்ஹாதி ஆகியோரின் வழிகாட்டலில், சுன்னத்வல் ஜமாஅத்தில் தலைசிறந்த அறிஞர்களான இமாம் அல்முகிர்ரம், இமாம் அல்கவார்ஸமி போன்றோரின் 'மக்தலுல் ஹு"ஸைன்' எனும் வரலாற்று நூலை ஆதாரமாகக் கொண்டு தொகுக்கப்பட்டதாகும்.

கேளிக்கைகளும், நகைச்சுவைகளும் பல அவைகளை ஆக்கிரமித்திருக்கும் குக்கிராம மாதிரி உலகில் அழுகையையும், கவலையையும் தந்து, ஈமானிய எழுச்சியையும், இஸ்லாமிய விழுமியங்களை உயிர்ப்பிக்கச் செய்வதன் பாலான தூண்டுதலையும் இந்நூல் வழங்க

வேண்டும் என்பது எமது எதிர்பார்ப்பாகும். மேலும் நபி (ஸல்) அவர்கள் மீதும், அவர்களது குடும்பத்தினர் மீதும் தூய அன்பையும் நேசத்தையும் உருவாக்கி, முஹர்ரம் மாதம் தொடர்பான தெளிவையும், இயல்பான அறிவையும் இது வழங்க வேண்டும். ஏனெனில், முஹர்ரம் மாதம், இஸ்லாமிய புதுவருடம், ஹிஜ்ரத் நிகழ்வு, நபிமார்களின் வெற்றி என பலவகையான சிறப்புகளைத் தாங்கியுள்ள போதிலும், இமாம் ஹுஸைனின் ஷஹாதத் எனும் மிகப் பாரிய சோகத்தினுள் இவற்றின் சந்தோஷச் செயல்ரூபங்கள் அமிழ்ந்து போய்விடுகின்றன என்பதை நாம் நன்கு விளங்கிக் கொள்ள வேண்டும். கர்பலா நிகழ்வு, இஸ்லாமிய வரலாற்றில் கறைபடிந்த சோகநிகழ்வாகவும், பல தாக்கங்களினதும், மாற்றங்களினதும் ஊற்றாகவும் திகழ்கின்றது.

ஒரு வீட்டில், திருமணம், பிள்ளைப்பேறு, புதுவீடு புகுதல் என பல விசேட நிழ்வுகள் நடந்தேறுகின்றன. அதேவீட்டில் மறுதினம், மிகப் பிரியத்துக்குரிய ஒருவர் திடீரென இறந்து விட்டார் எனில், அவ்வீட்டின் நிலை எவ்வாறிருக்கும்? இவ்வாறானதோர் இயல்புநிலையிலேயே முஹர்ரம் மாதம் விளங்குகின்றது.

அதேவேளை, கர்பலா நிகழ்வில் அடக்குமுறைகளையும், அட்டூழியங்களையும் அரங்கேற்றி இமாம் ஹுஸைனை மிகக் கொடூரமாகக் கொன்றொழித்த உமையாக்கள், இந்நாளை மகிழ்ச்சிக்குரிய நாளாகக் கொண்டாடி மகிழ்ந்தார்கள். இந்நிலையில், பெருமானார் (ஸல்) அவர்களினதும், அன்னை பாத்திமா, அறிஞர் அலி ஆகியோரினதும் நிலை எவ்வாறு அமைந்திருக்கும் என்பதை சிந்தித்துணர வேண்டிய கடப்பாடு எம் அனைவருக்கும் இருக்கின்றது.

இந்நூல் அழகுற வெளிவருவதற்கு வழிசமைத்த மௌலவி அல்ஹாபிஸ் எம்.யூ.எம். ஸபீர் அவர்களுக்கும், மனமுவந்து அணிந்துரை வழங்கிய கௌரவ கலாநிதி கே.எம்.எச்.காலிதீன் ஹஸ்ரத் அவர்களுக்கும், இந்நூலை மிக விரைவில் வெளியிட ஆக்கமும், ஊக்கமும் வழங்கிய அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றிகள்.

*அண்ணல் நபி (ஸல்) அவர்களும், அவர்களது பரிசுத்த அஹ்லுல் பைத்தினரும் எவ்விடயத்தில் திருப்தியும், மகிழ்வும் கொண்டார்களோ அதுவே எம்முடையவும் திருப்தியாகவும் மகிழ்ச்சியாகவும் அமைய வேண்டும் என இருகரமேந்திப் பிரார்த்திக்கின்றேன்.*

*வஸ்ஸலாம்.*

அஷ்ஷெய்க் அப்துல் ஹலீம் (கும்மி)
**20.01.2003**

# ஆன்மீகப் போராட்டமும் அழுகை நிறைந்த சம்பவங்களும்

## 01) இமாம் ஹுஸைனின் புதல்வர் காஸிம் அவர்களது பரிதாப மரணம்.

*இமாம் ஹு"ஸைன் அவர்கள் தமது சகாக்களை ஆசூரா தின இரவு, கூடாரத்துள் ஒன்றுகூட்டி, மிகவும் நீண்ட உருக்கமான உரையொன்றை நிகழ்த்தினார்கள். அதன் சுருக்கம் பின்வருமாறு அமைந்திருந்தது;*

*"எனது சகாக்களே! உங்களது விடயத்தில் நான் முழுமையான திருப்தியும் சந்தோஷமும் கொண்டிருக்கிறேன். எனது நண்பர்களை விடச் சிறந்த நண்பர்களையோ, எனது குடும்பத்தினரை விடச் சிறந்த குடும்பத்தினரையோ நான் காணவில்லை. நான் உங்கள் அனைவருக்கும் சுயமாக சிந்திக்கக் கூடிய சிந்தனைச் சுதந்திரத்தை தந்துவிட்டேன். எனது நண்பர்களே! குடும்பத்தினர்களே! பிள்ளைகளே! உடன்பிறப்புக்களே! உமையாக்கள் இன்று குறிவைத்துள்ளதெல்லாம் என்னை மாத்திரமே. உங்களுடன் எவ்வித பகையோ, வெறுப்போ அவர்களுக்கில்லை. ஆகவே, உங்களில் யாரேனும் இங்கிருந்து செல்ல விரும்பினால் அவர் தாராளமாக இங்கிருந்து சென்றுவிடலாம். இந்த இருளின் அடர்த்தி உங்களுக்கு சாதகமாக இருக்கும் என நான் நினைக்கிறேன்"*

*இமாம் ஹு"ஸைனின் இக்கூற்றை செவியுற்றதும், அன்பொழுக அவர்களை நோக்கிய நண்பர்கள், "இறைத்தூதரின் பேரரே! இது நடக்கக் கூடிய காரியமா! உண்மையினதும், சத்தியத்தினதும் உறைவிடமான தங்களை தனியே விட்டு விட்டு நாங்கள் எவ்வாறு போக முடியும்!" என்று உருகிய உள்ளத்துடன் உரத்துக் கூறினர்.*

அவர்களது அன்புக் கூற்றில் நெகிழ்ந்து போன இமாம் ஹுஸைன் அவர்கள் கவலை தொனிக்கும் குரலில் "நாளை நாமனைவரும் கொலை செய்யப்பட்டு விடுவோம்" என்று பகன்றார்கள். ஆனாலும், இவ்அபாயகரமான முன்னறிவித்தல் அவர்களது நண்பர்களில் சந்தோஷத்தையன்றி வேறெவ்வித மாற்றங்களையும் உண்டாக்கவில்லை. தமது ஷஹாதத்தை நினைந்து அவர்கள் மகிழ்ச்சியுற்றுத் திளைத்தனர்.

அச்சந்தர்ப்பத்தில், அங்கிருந்த சிறுவர் காஸிம் அவர்கள் இமாம் ஹுஸைனுக்கு முன்னால் வந்தார்கள். இமாம் ஹஸனின் புதல்வரான அவாகள் தந்தையை இழந்த பிறகு, சிறிய தந்தை ஹுஸைனுடனேயே வாழ்ந்து வந்ததனால், அவர்கள் மீது அபரிமிதமான அன்பும் பாசமும் கொண்டிருந்தார்கள்.

இமாம் ஹுஸைனை நோக்கிய காஸிம், "என் அன்பின் சிறிய தந்தையே! நாளை நானும் கொலை செய்யப்படுவேனா? எனக்கும் ஷஹாதத்தின் கூலி கிடைக்கப் பெறுமா?" என கனிந்து கேட்டார்கள். சிறுவரின் கேள்வியில் உருகிப் போன இமாம் ஹுஸைன் அவர்கள், சிறுவரை நெருங்கி "மகனே! நான் உங்களிடம் ஒரு கேள்வி கேட்பேன். அந்தக் கேள்விக்கு நீங்கள் பதில் சொன்னதும், உங்களது கேள்விக்கான பதிலை நான் கூறுகின்றேன்" என்று கூறி விட்டு, "மகனே! நீங்கள் மரணத்தை எவ்வாறு கருதுகிறீர்கள்?" எனக் கேட்டார்கள். உடனே சிறுவர் காஸிம், "என் சிறிய தந்தையே! மரணம் என்பது எனக்கு தேனை விடவும் மதுரமானது" என திடமாக பதிலுரைத்தார்கள்.

சிறுவரின் பதிலைக் கேட்டு நெஞ்சுருகிப் போன இமாம் ஹுஸைன் அவர்கள், "மகனே! நாளை நீங்களும் கொலை செய்யப்படுவீர்கள்" என்று கூறிக் கண்ணீர் உகுத்தார்கள். தொடர்ந்து கூறினார்கள்;

"மகனே! மற்றவர்கள் உயிர் நீப்பதற்கும், நீங்கள் உயிர் நீப்பதற்கும் இடையிலே வித்தியாசமுள்ளது. ஏனெனில், நீங்கள் மற்றவர்களை விட அதிகமான சோதனைக்கு உள்ளாக்கப்படுவீர்கள்" என்று கூறினார்கள்.

மறுநாள், காஸிம் அவர்கள், இமாம் ஹுஸைனிடம் பிடிவாதமாக நின்று யுத்தத்தில் தாமும் பங்கேற்பதற்கான அனுமதியைப் பெற்றுக் கொண்டு களத்திற்கு வந்தார். அவர் சிறுவராக இருந்ததனால், அவருக்குத் தகுமான கவசமோ, பொருத்தமான ஆயுதமோ எதுவும் இருக்கவில்லை. தலையிலே ஒரு தலைப்பாகையை அணிந்த போது, அவரது அழகு முகம் மேலும் வசீகரம் பெற்றது. சந்திரனின் ஒரு பாதி என பார்த்தவர்கள் அனைவரும் வர்ணித்தனர்.

"உம்மைக் காண்போரெல்லாம் 'சிவப்பு நிற பூவின் இலையை காற்று எங்கு கொண்டு செல்கின்றது?' என்பர்" என்று காஸிம் யுத்தத்திற்காகப் புறப்படும் காட்சியை தன் கவிதையில் வர்ணிக்கின்றார் ஒரு பாரசீகக் கவிஞர்.

காஸிமின் இடது காலில் இருந்த பாதரட்சை அவிழ்ந்திருந்ததாக அறியப்படுவதிலிருந்து, பாதரட்சையை சீர்செய்து கொள்வதற்குரிய ஆயுதமும் அவர்களுக்கில்லாதிருந்ததை உணர முடிகின்றது. காஸிம் கூடாரத்தை விட்டு வெளியே வந்த போது, இமாம் ஹுஸைன் அவர்கள் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்தவாறு தயார் நிலையில் இருந்தார்கள். அவர்கள் காஸிமின் மீது மிக்க பாசம் கொண்டிருந்தார்கள். தமது உற்ற சகோதரர் ஹஸனின் நினைவுச் சின்னமாக அன்பு காட்டி வந்த காஸிமை இழப்பதென்பது அவர்களால் தாங்கிக் கொள்ள முடியாத உளவலியைத் தோற்றுவித்தது. அவ்வேளையில்

"எனது சாச்சாவே! இதோ காஸிம் இப்னு ஹஸன்" என்ற மரண ஒலி கேட்டுத் திடுக்குற்ற இமாம் ஹுஸைன் அவர்கள், அது காஸிமின் அபயக்குரல் என்பதை உணர்ந்து கொண்டார்கள். புயலெனப் பாய்ந்து சென்று, களத்தினுள் புகுந்தார்கள். காஸிம் வீழ்ந்து கிடக்கும் இடத்தைக் கண்டுபிடித்து, அருகாமையில் சென்றார்கள். சூழ நின்ற எதிரிப் படையினரை தமது வாளினால் துரத்தியடித்தார்கள்.

இமாம் ஹுஸைனின் வீரத் தாக்குதலுக்கு ஈடுகொடுக்க முடியாத எதிரிக் கூட்டம் அங்குமிங்கும் சிதறியோடியது. இவர்களில் ஒரு வஞ்சகன் குதிரையின் கீழால் சென்று காஸிமின்

தலையை கொய்து விட எத்தனித்தான். ஆனாலும், துரதிஷ்டவசமாக தன் சகாக்களின் குதிரைகளினது கால்களுக்குள் அகப்பட்டு, மாய்ந்து போனான்.

இமாம் ஹு"ஸைன் அவர்கள் காஸிமின் அருகே அமர்ந்தார்கள். சூறாவளி போல் எங்கும் புழுதி நிறைந்திருந்ததால் எங்கு என்ன நடக்கின்றது என்று அறியாது எதிரிப் படையினர் திண்டாடிப் போயினர். ஒருவாறு புழுதி அடங்கிய பின் இமாம் ஹு"ஸைன் அவர்கள் காஸிமின் அருகே அமர்ந்திருப்பதைக் கண்டார்கள். காஸிமின் தலையை தம் மடியில் கிடத்திய இமாமவர்கள்.

يعز والله علي عمك أن تدعوه فلا يجيبك أو يجيبك
فلا يعينك أو يعينك فلا يغني عنك صوت

"உங்களது சிறிய தந்தையை நீங்கள் அழைக்கின்றீர்கள். ஆனால், அவரால் உங்களுக்கு பதிலளிக்க முடியாது. அல்லது அவர் பதில் தருகின்றார். அது உங்களுக்கு எவ்வித பயனுமளிப்பதில்லை" என்று கண்ணீர் மல்க கூறினார்கள்.

அந்நிலையிலேயே சிறுவர் காஸிமின் தூய ஆன்மா, உடலை விட்டுப் பிரிந்து இறைவனைச் சென்றடைந்தது.

ولا حول ولا قوة الا بالله العلي العظيم

## 02) அபுல் பழ்ல் அப்பாஸ் (ரழி) அவர்களின் மரணம்

கர்பலா நிகழ்வில் முக்கிய கொலைஞனாகக் கருதப்படுபவன் ஷிம்ர் என்பவனாவான். இவன், இமாம் அலியின் மனைவியருள் ஒருவராகிய உம்முல் பனீன் என்பவரது தூரத்து உறவினனாக இருந்தான். இமாம் அலி அவர்களுக்கும், உம்முல் பனீன் அவர்களுக்கும் மகனாகப் பிறந்தவரே ஹஸ்ரத் அபுல் பழ்ல் அப்பாஸ் (ரழி) அவர்களாவார்.

உமையாப் படையினர், கூபாவிலிருந்து கர்பலா நோக்கி

வருவதற்குத் தயாரான சந்தர்ப்பத்தில், அவையிலிருந்த ஒருவர் எழுந்து நின்று, "எமது குடும்ப உறுப்பினர்களில் சிலர், ஹு"ஸைனின் அணியில் உள்ளனர். எனவே அவர்களை எம்பக்கம் அழைத்து அவர்களைப் பாதுகாப்பதற்காக மடல் ஒன்று எழுதியனுப்ப வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். இவ்வேண்டுகோளை ஏற்ற உபைதுல்லா இப்னு ஸியாத், ஒரு கடிதம் எழுதி, அதை அபுல் பழ்ல் அப்பாஸ், மற்றும் அவரது உறவினர்களிடம் சேர்த்து விடும் படியாகக் கூறி, ஷிம்ரிடம் கொடுத்தனுப்பினான்.

கடிதத்தை எடுத்துக் கொண்டு கர்பலாவுக்கு வந்து சேர்ந்த ஷிம்ர், அன்றிரவு இமாம் ஹு"ஸைனின் கூடாரத்தை நெருங்கி, "எங்களுடைய சகோதரியின் புதல்வர்கள் எங்கே?" என்று சத்தமிட்டுக் கேட்டான். கூடாரத்தினுள் இருந்த எவரும் அவனது அழைப்புக்கு பதிலளிக்கவில்லை. அபுல்பழ்ல் அப்பாஸ் அவர்களும் இமாம் ஹு"ஸைனுடன் அவ்விடத்திலேயே அமர்ந்திருந்தார்கள். இமாமவர்கள், அப்பாஸை நோக்கி, "அவன் கெட்டவனாக இருந்தாலும் அவனுக்கு பதிலளியுங்கள்" என்று கூறினார்கள்.

கூடாரத்தை விட்டு வெளியே வந்த அப்பாஸ் அவர்கள், "என்ன விடயம்?" என்று அழுத்தமாகக் கேட்டார்கள். "உங்களை பாதுகாக்க வேண்டும் என்பதற்காக தலைவர் உபைதுல்லாவிடமிருந்து மடல் கொண்டு வந்துள்ளேன். நீங்கள் ஹு"ஸைனை விட்டு விடுங்கள். இங்கிருந்து சென்று விடுங்கள். உங்களுக்கு நாம் எந்த ஆபத்தும் விளைவிக்க மாட்டோம். இவ்விடயத்தில் நீங்கள் சுதந்திரமாக செயற்படலாம்" என்று ஷிம்ர் கூறினான். இதைக் கேட்டு சினமுற்ற அப்பாஸ் அவர்கள் ஷிம்ரை நோக்கி, "எங்களது மரியாதைக்குரிய இமாம், எங்களது அன்புக்குரிய சகோதரர், ஹு"ஸைனை விட்டு விட்டு நாங்கள் செல்வதா! உனது தலைவர் உபைதுல்லாவிடமிருந்து பாதுகாப்பு மடல் ஏந்தி வந்த உனக்கு சாபம் உண்டாவதாக!" என்று கர்ஜித்தார்கள்.

அபுல்பழ்ல் அப்பாஸ் (ரழி) அவர்கள் இமாம் அலியின் மகனாவார். ஹஸ்ரத் பாத்திமா அவர்கள் வபாத்தான பின், இமாம் அலி அவர்கள், தமது சகோதரர் அகீலிடம், "வீரமுள்ள

நல்ல ஆண்மக்களைப் பெற்றெடுக்கக் கூடிய ஒழுக்கமுள்ள பெண்ணை தமக்காகப் பார்க்குமாறு வேண்டிக் கொண்ட போது, அகீல் அவர்கள் (ஆண்மக்களின் தாய் எனும் பொருள் கொண்ட) உம்முல் பனீன் எனும் பெண்ணை இமாம் அலி அவர்களுக்கு மணம் முடித்து வைத்தார்கள். இத்தகைய பெண்மணிக்குப் பிறந்த வீரமும், தீரமும், உடலுறுதியும், அழகுத் தோற்றமும் கொண்டவரே அப்பாஸ் அவர்களாவார். இவர்கள் மூலம் இமாம் அலியின் எதிர்பார்ப்பும் பூரணம் பெற்றது. இதற்கமைய அப்பாஸ் அவர்கள் உறவு முறையில் இமாம் ஹுஸைனுக்கு சகோதரராக இருந்தார்கள்.

ஆஷுரா தினத்தின் போது, இமாம் ஹுஸைனுடன் இணைந்து போராட முதலில் விருப்பம் தெரிவித்தவர் அப்பாஸ் அவர்களாகும். வீராவேசத்துடனும், குமுறும் உள்ளத்துணர்வுடனும் யுத்தத்திற்கான அனுமதி வேண்டி நின்ற அப்பாசுக்கு அனுமதி வழங்கிய இமாம் ஹுஸைன் அவர்கள், "தண்ணீரின்றி இங்கு அனைவரும் கஷ்டப்படுகின்றனர். முடியுமானால், சிறிது தண்ணீர் கொண்டு வாருங்கள்" என்று பணித்தார்கள்.

சகோதரரின் அன்பு வேண்டுகோளை மனமுவந்தேற்ற அப்பாஸ் அவர்கள், தைரியத்துடனும், மனத்துணிவுடனும் தண்ணீர் மொண்டு வரபட் புறப்பட்டார்கள். இதன் காரணமாக "ஸகா" (குடிநீர் எடுத்து வருபவர்) என்ற சிறப்புப் பெயரும் அவர்களுக்கு வழங்கப்படுகின்றது. மிகக் கொடூரமான முற்றுகையும், தடைகளும், ஆக்கிரமிப்புகளும் சூழ்ந்திருந்த அந்த வேளையில் உயிருக்கு உத்தரவாதமற்ற அந்த அச்சச் சூழ்நிலையிலே இமாம் ஹுஸைனின் சாதாரண கட்டளையையும் சிரமேற் கொண்டு செயலுருப்படுத்த வேண்டும் என்ற அப்பாஸ் அவர்களின் எண்ணமும், தியாக உணர்வும் இங்கு விதந்துரைக்கத்தக்கதாகும்.

புராத் நதியைச் சூழ ஆயுதம் தரித்த சுமார் நாற்பதாயிரம் உமையாப் படைவீரர்கள் காவல் நின்று கொண்டிருந்தனர். அவர்களது முற்றுகையை தன்னந்தனியாக நின்று தகர்த்தெறிந்த அப்பாஸ் அவர்கள் தமது குதிரையுடன் நதி நீருக்குள் சென்றார்கள். தாம் கொண்டு வந்திருந்த குவளையினுள்ளே

*தண்ணீரை மொண்டு நிரப்பினார்கள். போராடிய களைப்பும், தண்ணீர் தாகமும் அவர்களை வாட்டியது. சிறிது தண்ணீர் அருந்தினால் தெம்பாக இருக்கும் என்று எண்ணம் தோன்றியது. முழங்காலளவு தண்ணீரில் நின்று கொண்டிருந்த குதிரையில் இருந்தவாறே குனிந்து தமது இரு கைகளினாலும் தண்ணீரை அள்ளிய அப்பாஸ் அவர்கள், அதனை அருந்துவதற்காக தமது உதடுகளின் அருகே கொண்டு சென்றார்கள். அச்சமயத்தில் ஏதோ சிந்தனை வயப்பட்ட அப்பாஸ் அவர்கள், கையிலேந்திய தண்ணீரை கீழே வீசி விட்டு, நதியை விட்டு வெளியே வந்தார்கள். பிரகாசிதத் முகப் பொலிவுடன் கவிதையொன்றையும் படித்தார்கள்.*

هـــــذا الحسين شارب المنون        وتشربيـــــن بـــارد المعـين

*அருமை ஹுஸைன் மரணத்தை சுவைத்துக் கொண்டிருக்கிறார்;*
*அடிமை நீயோ மதுரமான நீரை சுவைப்பதா?*

*அங்கிருந்து தமது கூடாரம் நோக்கிப் புறப்பட்ட அப்பாஸ் அவர்கள், தமது பயணப் பாதையை மாற்றி, ஈத்தை மரச்சோலை வழியாகத் திரும்பினார்கள். எவ்வாறேனும், இமாம் ஹுஸைனுக்கும், உடன் இருப்போருக்கும் மிக இன்றியமையாத் தேவையாக உள்ள இத்தண்ணீரை அங்கு கொண்டு சென்று சேர்த்து விட வேண்டுமே என்ற கவலையும், எண்ணமும் அவர்களுக்கு பிரதானமாகத் தெரிந்தது.*

*அதற்கிடையில், எதிரிகள், தம்மைத் தாக்கியழித்து விடக் கூடாதே எனவும் அவர்கள் கவலை கொண்டார்கள். ஆனாலும், எதிரிகள் திடீரென குறுக்கிட்டு, சூழ நின்று தாக்கி, அவர்களது வலது கரத்தைத் துண்டித்து விட்டார்கள். தளர்ந்து விடாத அப்பாஸ் அவர்கள், வீராவேசமாகப் போரிட்டு எதிரிகளைத் திணறடித்து விட்டு, மீண்டும் பயணத்தைத் தொடர்ந்தார்கள். வருகையில் பின்வரும் கவிதையையும் பாடினார்கள்;*

*"இறைவன் மீதாணையாக! எனது வலது கரத்தை நீங்கள் துண்டித்தாலும், ஹுஸைனுக்கான எனது ஆதரவு நிலையிலிருந்து நான் சற்றேனும் பின்வாங்கப் போவதில்லை" இக்கவிதையைப் பாடிக் கொண்டிருக்கும் சந்தர்ப்பத்தில் திடீரென*

*முன்னெதிர்த்த எதிரிகள், அவர்களது இடது கரத்தையும் மிக மோசமாகத் துண்டித்து விட்டார்கள். மூர்க்கத்தனமாகத் தாக்கி, அவர்களைக் குற்றுயிராக்கிக் கீழே சாய்த்து விட்டுச் சென்றார்கள். அவர்கள் கொண்டு வந்த தண்ணீர் குவளை கீழே விழுந்து, தண்ணீர் துளிகளும் சிதறி பாலைவன மணலில் புதையுண்டு போயின.*

وَاللهِ إنْ قَطَعتُمُ يَمينـي ** إنّي أُحَامي أبداً عن ديني
وعَن إمامٍ صَادِقِ اليقين ** نَجلُ النبيِّ الطاهِرِ الأمين ( بحار الأنوار)

*கர்பலாவில் இச்சோக நிகழ்வுகள் நடைபெற்றுக் கொண்டிருந்த அந்த சந்தர்ப்பத்தில், அப்பாஸின் தாயாரான உம்முல் பனீன் அவர்கள் மதீனாவிலே இருந்தார்கள். தமது நான்கு ஆண்மக்களும் கர்பலாவில் ஷஹீதாக்கப்பட்டு விட்டதாகக் கேள்வியுற்ற அவர்கள் ஆற்றொணா சோகக் கடலில் மூழ்கிக் கதறி அழுதார்கள். மதீனாவில் ஸஹாபாக்கள் அடக்கம் செய்யப்பட்டிருக்கக் கூடிய ஜன்னதுல் பகீஃ எனும் இடத்துக்கு வந்து, தமது ஆற்றாமையினால் ஒப்பாரி வைத்து அழுதார்கள். இதயத்தைப் பிழியும் இக்காட்சியைக் கண்ணுற்ற பொதுமக்களும் கூட மனதுக்குள் விசும்பி அழுதார்கள்.*

*உள்ளத்தைப் பிசையும் அவர்களது உணர்ச்சி பூர்வ வசனங்கள் பின்வருமாறு அமைந்திருந்தன;*

**يا من رأى العباس كر    على جماهير النقد**

**و وراه من أبناء حيدر    كل ليث ذي لبد**

**أنبئت أن ابني أصيب    برأسه مقطوع يد**

**و يلي على شبلي امال    برأسه ضرب العمد**

**لو كان سيفك في يديك    لما دنا منه احد**

*"அப்பாஸின் சாகசக் காட்சியைக் கண்ட கண்ணே! கர்ஜிக்கும் எனது ஆண்சிங்கங்களுள் ஒன்றான அபுல் பழ்ல் அப்பாஸைத் தாக்கிய இழிவான கூட்டத்தைக் கண்டவர்கள் என்னிடத்தில் சம்பவம் ஒன்றினைக் கூறினார்கள். உண்மையோ பொய்யோ எனக்குத் தெரியாது.*

*எனது மகனின் கைகள் துண்டிக்கப்பட்ட போது, நெற்றியையும் இரும்பினால் தாக்கியதாகக் கூறினார்களே, அது உண்மையா? அபுல்பழ்ல்! எனது அன்பு மகனே! எனக்குத் தெரியும்; உனது கரங்கள் துண்டிக்கப்படாது இருந்திருப்பின், உலகில் யாரும் உன்னை நெருங்க முடியாது. உன் கரங்களைத் துண்டித்த நிலையிலேயே அவர்கள் இதனைச் செய்தார்கள்"*

ولا حول ولا قوة إلا بالله العلي العظيم

## 03. இரத்தம் படிந்த குதிரையும், கதறியழு த குடும்பத்தினரும்.

*சுபஹ் தொழுகையை நிறைவேற்றிய இமாம் ஹுஸைன் அவர்கள், தமது நண்பர்கள், உறவினர்களை நோக்கி "நண்பர்களே! உறவினர்களே! மரணம் என்பது வெறுமனே ஒரு உலகிலிருந்து இன்னொரு உலகிற்கு கடந்து செல்லும் ஒரு பாலமல்ல. மாறாக, கஷ்டங்கள் நிறைந்த ஒரு உலகிலிருந்து, அதிசிறப்பும், மகத்துவமும் மிக்க ஒரு உலகிற்குச்செல்லும் அற்புதப் பயணமாகும்" என்று உரை நிகழ்த்தியதோடு, மரணத்திற்குத் தயாராகும் படி மக்களை தூண்டவும் செய்தார்கள்.*

*அங்கு சமுகமளித்திருந்தவர்களுள் ஹிலால் இப்னு நாபிஃ. என்பவரும் இருந்தார். கர்பலாவில் இமாம் ஹுஸைனின் நிலை பற்றி விபரிக்கும் அவர், "கர்பலா நிகழ்வு இடம் பெற்ற அன்றைய நாளில் இமாம் ஹுஸைன் அவர்களது தூய முகம் முன்பை விடவும் பிரகாசமாகவும், மலர்ச்சியாகவும் இலங்குவதை நான் அவதானித்தேன்.*

அவர்களது வீரமரணம் நெருங்க நெருங்க அவர்களது முகத்தின் பொலிவு மேலும் மெருகேறிக் கொண்டே போவது கண்டு நான் ஆச்சரியமுற்றேன். இறுதி நேரத்தில், அவர்களது புனித சிரசை எதிரிகள் துண்டித்த சந்தர்ப்பத்திலே, அவர்களது முகத்தில் செறிவுற்றுத் தெரிந்த அழகும், மலர்ச்சியும் அவர்களது மரணம் எங்களுக்கு ஏற்படுத்திய வலியைக் கூட மறக்கச் செய்து விட்டது" எனக் கூறுகின்றார்.

الله لقد شغلني نور وجهه عن الفكرة في قتله (اللهوف)

இமாம் ஹுஸைன் அவர்கள், தாம் சத்தமிட்டால் கூடாரத்திலுள்ள குடும்பத்தாருக்கு எட்டக்கூடிய தொலைவில் இருந்தவாறே போர் செய்தார்கள். இதற்கு பிரதானமாக இரு காரணங்களைக் குறிப்பிடலாம்;

01) தாம் கூடாரத்தை விட்டு தொலைதூரம் சென்று விட்டால், அச்சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி, எதிரிகள் கூடாரத்தினுள் நுழைந்து அங்கிருக்கும் பெண்களையும் குழந்தைகளையும் துவம்சம் செய்துவிடுவார்களோ என்று அவர்கள் பயந்தமை. இதனால், சண்டையின் போது சற்று முன்னே செல்ல வேண்டி ஏற்பட்டாலும், பின்னர் குறித்த இடத்திற்கு மீண்டு வந்து நின்று கொள்ளக் கூடியவர்களாக இமாம் ஹுஸைன் இருந்தார்கள்.

02) தமது சத்தத்தைச் செவியுறும் குடும்பத்தினர், ஹுஸைன் இன்னும் உயிரோடுதான் இருக்கிறார் என்ற சந்தோஷத்தில் சற்று நிம்மதியுறுவர் என்று அவர்கள் எதிர்பார்த்தமை. எனினும், இமாம் அவர்கள் அடிக்கடி உள்ளே செல்வதும், வெளியே வருவதுமாக இருந்தார்கள் என்பது இதன் அர்த்தமல்ல. மாறாக, இமாமவர்கள், தமது குடும்பத்தினர் மீது அளவற்ற அன்பும், நேசமும் கொண்டிருந்தார்கள் என்பதே இதன் அர்த்தமாகும்.

இமாம் ஹுஸைன் அவர்கள், போர் செய்வதற்கு முன்னர், தமது குடும்பத்தினரிடம் தாம் உயிரோடு இருக்கும் வரை, எக்காரணங் கொண்டும் கூடாரத்தை விட்டு வெளியே வரக் கூடாது என்று பணிப்பு விடுத்ததோடு, அவ்வாறு வெளியே வருவது நற்கூலிகளை அழித்து விடும் என்றும், மிக விரைவில் எதிரிகள் தண்டிக்கப்படுவார்கள் என்றும் ஆறுதலும் கூறினார்கள்.

கற்பொழுக்கமும், சமயப் பற்றும் மிக்கவர்களாக இருந்த இமாமின் அஹ்லுல் பைத்தினர், தமக்குக் கூறப்பட்ட கூற்றுக்கேற்ப கூடாரத்தை விட்டு வெளியே வராது, உள்ளிருந்தவாறே இமாமவர்களின் சத்தத்தை செவிமடுத்து, அவர்கள் இன்னும் உயிரோடுதான் இருக்கின்றார்கள் என்று திருப்திப்பட்டுக் கொண்டு கலவரத்துடன் அமர்ந்திருந்தார்கள். அத்தோடு ஹு"ஸைன், தமது கூடாரத்திற்கு வருவார் என எதிர்பார்த்தவாறும் இருந்தார்கள். ஏனெனில், ஒரு தடவை, களம் சென்ற இமாமவர்கள், போராடி விட்டு, சிறிது நேரத்தின் பின் கூடாரத்திற்கு வந்து குடும்பத்தினரை சந்தித்து ஆறுதல் படுத்தி விட்டு மீண்டும் களம் சென்றிருந்ததனால், அவர்களது மீள்வருகையை அஹ்லுல் பைத்தினர் மிக ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார்கள்.

இமாம் ஹு"ஸைன் அவர்களுக்கு ஒரு குதிரை இருந்தது. அது நன்கு பழக்கப்பட்ட குதிரையாகவும், செயற்திறன் கொண்டதாகவும் இருந்தது. சூழ்நிலைகளின் தன்மைகளுக்கேற்ப தனது சத்தத்தை வெளிப்படுத்தக் கூடிய ஆற்றலை அது கொண்டிருந்தது. கூடாரத்தினுள்ளே இருந்த அஹ்லுல் பைத்தினர், இமாமவர்களின் சத்தத்தை செவிமடுத்து, குதிரையினது கனைப்பின் அர்த்தத்தை உணர்ந்து திருப்தியுற்றுக் கொண்டிருந்த வேளையிலே, திடீரென இமாம் ஹு"ஸைனின் சத்தம் தடைப்பட்டுப் போனது. வாள்களும், ஈட்டிகளும் உரசும் மயான ஓசைகளிடையே எதிரிகளது வெற்றிக் களிப்பின் நாராச ஒலி செவிகளை அடைத்தது. எல்லோரும் திடுக்கமும், நடுக்கமுமுற்றனர். என்ன நடந்து விட்டது என்பதை அனுமானிக்க முடியாமல் திகைப்புக்குள்ளாகினர். எதிர்நோக்கவுள்ள செய்தி, ஈடிணையற்ற சோகத்தைத் திணிக்கும் பாதிப்பான ஓர் அம்சமாகவே அமையப் போகின்றது என்று அவர்களது உள்ளுணர்வுகள் எச்சரித்துக் கொண்டிருந்தன. சற்று நேரத்தில் இமாமவர்களினது குதிரையின் கனைப்பொலி கூடாரத்திற்கு அண்மையில் கேட்டது. ஆனாலும், அது இயல்புக்கு வித்தியாசமானதாகவும், இமாமினது இருப்பின் அடையாளத்திற்கான கனைப்புக்கு முரண்பட்டதாகவும் இருந்ததை உணர்ந்த அஹ்லுல் பைத்தினர், நடுங்கும் நெஞ்சுடன் குதிரையை பார்ப்பதற்காக வெளியே வந்தனர். கூடாரத்தின் ஓர் புறமாக சோர்ந்து போய் நின்றிருந்த

குதிரையைக் கண்டதும் எல்லோரும் அதிர்ந்து, ஆர்த்த சோகத்தில் பதைபதைத்துப் போயினர். உடல் முழுவதும் இரத்தக் கறை படிந்து, அங்கங்கள் காயப்பட்டு, கம்பீரமாக வீற்றிருக்கும் இமாமை இழந்து சோர்ந்த களைப்புடன் நின்றிருந்த குதிரையைக் கண்டதும், நிகழ்வின் உண்மை நிலையை அறிந்து கொண்ட அவர்கள், இமாம் ஹுஸைனை தாம் முழுமையாக இழந்து விட்டோம் என்றுணர்ந்து துடிதுடித்துக் கதறியழத் தொடங்கினார்கள். புனிதமும், மகத்துவமும் மிக்க, அன்பும் நேசமும் மிகைத்த ஒரு இணையற்ற சகோதரரை, நண்பரை, உறவினரை இழந்து விட்ட சோகத்தில் கூடாரத்தினுள் இருந்த அனைவரும் நெஞ்சு பொறுக்கமாட்டாமல் கண்ணீர் ஆறாகப் பெருக்கெடுக்க அழுது தீர்த்தார்கள்.

இமாம் ஹுஸைனுக்கு ஸகீனா எனும் ஒரு பெண்மகள் இருந்தார். அழகும், ஒழுக்கமும், அறிவும் பெற்றுத் திகழ்ந்த இவர், பிற்காலத்தில் சிறந்த அறபு இலக்கியவாதியாகவும், அறிஞராகவும் விளங்கினார். இமாம் ஹுஸைன் அவர்கள், ஸகீனா மீது, மிக்க பாசமும் அன்பும் கொண்டிருந்தார்கள். இருவரும் தமக்கிடையில் ஆழமான பாசப்பிணைப்பைப் பரஸ்பரம் பரிமாறி வந்தனர்.

தமது தந்தை, அநீதியான முறையிலே கொலை செய்யப்பட்டு விட்டதை அறிந்ததும், தாங்க முடியாமல் தவித்துக் கதறியழுத ஸ்கீனாவின் நிலை எல்லோர் கண்களிலும் சோகத்தைத் ததும்ப வைத்தது. குதிரையை நோக்கிய அவர், "என் தந்தையின் குதிரையே! என் தகப்பனார் களம் செல்லும் போது மிக்க வரட்சியுடனும், தாகத்துடனும் சென்றார்கள். அவர்களுக்கு தண்ணீர் கொடுத்த பின் கொல்லை செய்தார்களா? அல்லது நாவரண்ட நிலையிலே கொலை செய்தார்களா?" என்று பரிதாபத் தொனியுடன் கேட்டவர்களாக கதறியழுதார்கள். ஸகீனா அழுது கொண்டிருந்த அதே சந்தர்ப்பத்திலே களத்தின் ஓரிடத்தில் இமாம் ஹுஸைன் அவர்கள் குற்றுயிராகக் கீழே விழுந்து கிடந்தார்கள்.

ا جواد أبى هل سقى أبى أم قتل عطشانا ؟

ولا حول ولا قوة إلا بالله العلي العظيم



## 04. பச்சிளம் பாலகர் அலிஅஸ்கரின் பரிதாப மரணம்

*இமாம் ஹுஸைன் அவர்கள், கர்பலாவை வந்தடைவதற்கு முன்னரும், வந்தடைந்த பின்னரும் பல்வேறு கஷ்டங்களையும், சோதனைகளையும் ஏற்றார்கள். அவற்றுள் தண்ணீர் தாகம் என்பது பிரதானமானதாக இருந்தது. அருகில் வற்றாத புராத் நதி சலசலத்து ஓடிக் கொண்டிருந்த போதிலும், அதிலிருந்து ஒரு சொட்டு தண்ணீரும் எடுக்க முடியாதவாறு அவர்கள் முற்றுகையிடப்பட்டிருந்தனர். இதனால், பெண்கள், சிறுவர்கள், குழந்தைகள் என பலரும் தாகத்தில் நாவரண்டு துவண்டு போயினர். பாலூட்டும் தாய்மார்களும் தண்ணீரின்றித் தவித்ததனால், அவர்களிலும் பால்வற்றிப் போனது. தாயிடமிருந்து பால்அருந்த முடியாத குழந்தைகள், பசியில் வாடி வதங்கின.*

*இமாம் ஹுஸைன் அவர்களுக்கு அலிஅஸ்கர் எனும் ஆறுமாதம் நிரம்பிய குழந்தையொன்று இருந்தது. தாயிடம் பாலருந்த முடியாது பசியில் வாடிய அக்குழந்தையை தமது கைகளில் ஏந்திய இமாம் ஹுஸைன் அவர்கள், கூடாரத்தை விட்டு வெளியே வந்து, எதிரிப்படையினரை நோக்கி சத்தமிட்டார்கள்.*

*"உங்களுக்கு மார்க்கம் இல்லாவிட்டால், மறுமைநாள் பற்றிய அச்சம் இல்லாவிட்டால், உலகில் நீங்கள் சுதந்திர புருஷர்களாக இருங்கள். உங்களுடன் போராட வந்திருப்பவர்கள் நாங்கள்தான். இந்தச் சின்னஞ்சிறு குழந்தைகள் என்ன பாவம் செய்தார்கள்! எங்களுக்கு இல்லாவிட்டாலும் இந்தப் பச்சிளம் பாலகர்களுக்காகவேனும் கொஞ்சம் தண்ணீர் தாருங்கள்" என்று வேண்டி நின்றார்கள்.*

*ஆனால், அந்த எதிரிப்படையினரோ அக்குழந்தைக்கு தண்ணீரைக் கொடுக்கவில்லை. மாறாக, கூரிய ஈட்டி ஒன்றினை எடுத்து, குழந்தையின் கழுத்தைக் குறிபார்த்து எறிந்தார்கள். அவ்ஈட்டி குழந்தையின் கழுத்தில் குத்தி இரத்தத்தைப் பீறிட வைத்தது. தாகத்தினால் துவண்டு போயிருந்த குழந்தை, ஈட்டியின் அதீத தாக்குதலை தன் மெல்லிய உடலில் தாங்கிக் கொள்ளத் திராணியற்று துடிதுடித்து அவ்விடத்திலேயே ஷஹீதாகிப் போனது.*

*இமாமவர்கள் நெஞ்சுருகி அழுதார்கள். குழந்தையின் ஈடேற்றத்திற்காக அல்லாஹ்விடம் மன்றாடிப் பிரார்த்தித்தார்கள். குழந்தையை அடக்கம் செய்கின்ற போது, இமாமவர்களின் கைகள் நடுங்கின. வானத்தின் பக்கம் தமது கைகளை உயர்த்தி, "இறைவா! இத்தோடு உன்னுடைய பாதையில் என்னிடமிருந்த அனைத்தையும் இழந்து விட்டேன். என் பச்சிளம் பாலகர் அலிஅஸ்கரையும் உன்னுடைய பாதையில் குர்பானி கொடுத்துவிட்டேன்" எனக் கூறிப் பிரார்த்தித்தார்கள்.*

*அலிஅஸ்கர் பற்றிப் பிரஸ்தாபிக்கும் வரலாற்றாசிரியர்கள், "அக்குழந்தை தாகத்தினால் மிகவும் நலிவுற்றிருந்தது. நீரினுள் வாழும் ஒரு மீனை வெளியே தூக்கிப் போட்டால், அது எவ்வாறு துடிதுடித்துக் கொண்டிருக்குமோ, அவ்வாறே அக்குழந்தையும் தாகத்தைத் தாங்கிக் கொள்ள முடியாமல், வரண்டு போன தனது நாவை வெளியே நீட்டுவதும், உள்ளே இழுப்பதுமாக மிகக் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தது. அதன் நாவும், முரசும் காய்ந்து கணம் வெடித்த கம்பு போன்று ஆகிவிட்டிருந்தன" எனக் கூறுகின்றார்கள். உஸ்தாத் முஹ்ஸின் மழாஹிர் எனும் அறிஞர் தமது அல்ஜிஹாது பின்நப்ஸ் எனும் நூலில் இக்கருத்தைத் தெரிவிக்கின்றார்.*

## 05. ஈமானிய இதயமும், இரத்தம் படிந்த ஈட்டியும்.

*இமாம் ஹுஸைன் அவர்கள் தமது இறுதி மூச்சு வரை மேற் கொண்ட அனைத்து தீர்மானங்களும், செயற்பாடுகளும் சத்தியத்தை நோக்கியதாகவும், இறைவனுக்கான வழிப்படுதலாகவுமே அமைந்திருந்தன. முஹர்ரம் மாதம் ஒன்பதாம் நாள் இரவு, இமாம் ஹுஸைனிடம் "கொலையை விரும்புகின்றீர்களா? அல்லது சரணடைய விரும்புகின்றீர்களா?" என்று வினவப்பட்ட போது, இமாம் ஹுஸைன் சொன்னார்கள்;*

*"இறைவன் மீது ஆணையாக, நான் அவமானப்பட்டவனாக எனது கையை நீட்டி சத்தியப்பிரமாணம் செய்யவோ, அடிமையைப் போன்று பயந்து விரண்டோடவோ மாட்டேன்"*

والله لا أعطيكم بيدي إعطاء الذليل ولا اقر إقرار العبيد

*இமாம் ஹுஸைன் அவர்கள் பல்வேறு நெருக்கடிகளையும், உயிரை வருத்தும் பசி, புலனை அடக்கும் தாகம் என மோசமான சவால்களையும் எதிர்நோக்கிய போதிலும், தமது கொள்கையிலிருந்து சற்றும் பின்வாங்கி விடாது, உறுதியாகவும் திடகாத்திரமாகவும் நின்று, போராடிக் காட்டினார்கள். அவமானப்படுவதைக் காட்டினும், உண்மைக்காகப் போராடி உயிர்நீப்பது உன்னதமானது என்பதை உலகுக்கு தெளிவாகப் பறைசாற்றினார்கள்.*

*சண்டை ஆரம்பிப்பதற்கு முன், உமையாக்களைப் பார்த்து அவர்கள் வீரமுழக்கமிட்டார்கள். "கெட்டவனே! கெட்டவனின் மகனே!! வாளுருவிப் போராடுதல், சத்தியப் பிரமாணம் செய்தல் ஆகிய இரண்டிலொன்றைத் தேர்வு செய்யுமாறு என்னிடம் வேண்டி நிற்கின்றீர். நிச்சயமாக இழிவு எம்மை விட்டும் தூரமாகி விட்டது. அது எமக்கும், விசுவாசிகளுக்கும் பொருந்தக் கூடியதல்ல. தூய்மை மிக்க பரிசுத்த மடியில் வளர்ந்தவர்கள் நாங்கள்"*

ألا وإن الدعي بن الدعي قد ركز بين اثنتين بين السلة والذلة
وهيهات منا الذلة يأبى الله لنا ذلك ، ورسوله والمؤمنون ،
وحجور طابت وطهرت (مقتل الحسين)

கூபாவாசிகளை நோக்கி இமாம் ஹுஸைன் அவர்கள், சத்தமிட்டுக் கூறினார்கள்; "கூபாவாசிகளே! உங்களுக்குக் கட்டளையிடும் உங்கள் தளபதி படுமோசமானவன். அப்படியான ஒருவரது சொல்லைக் கேட்டு நீங்கள் படை சூழ்ந்திருக்கின்றீர்களே! என்னை சரணடையும்படி, அல்லது வாளேந்திப் போராடும்படி வற்புறுத்தியுள்ளார்கள். இவர்களுக்கு சத்தியப்பிரமாணம் செய்து நான் என்னை இழிவுக்குள்ளாக்கிக் கொள்வதா! நாம் இழிவின் கீழ் செல்பவர்கள் அல்ல. இறைதிருப்தியின் பாதையில் பயணிக்கும் நான், இழிவான பாதைக்கு என் வாழ்வை எவ்வாறு மாற்றிக் கொள்ள முடியும்! நபிகளார் (ஸல்) அவர்களது மார்க்கத்தைப் பின்பற்றும் நான், அது மாசுற்று அவமானப்படுத்தப்படுவதை எவ்வாறு பார்த்துக் கொண்டிருக்க முடியும்! நான் அலியின் மடியில் வளர்ந்தவன். அந்த மடி பாவத்திற்கோ, பாவத்தை பார்த்துக் கொண்டிருப்பதற்கோ அனுமதிப்பதை மறுத்தோடி நிற்கின்றது"

இமாம் ஹுஸைன் அவர்களின் இவ்வீராவேசம் பலரையும் கதிகலங்க வைத்தது. இமாமவர்கள் சத்தியப்பிரமாணம் செய்கின்ற விடயத்தை மிகவும் பிடிவாதமாக மறுத்து நின்றார்களெனின், அது வீணான பிடிவாதத்தினாலோ, தான்தோன்றித் தனத்தினாலோ அல்ல.

மாறாக, இறைவனது சட்டங்களுக்கு முரணான புறம்பான ஆட்சியொன்று உலகில் நிலைநாட்டப்பட்டு விடக் கூடாதே என்ற அக்கறையும், அவ்வாறான ஆட்சிகளின் உருவாக்கத்தின் போது, அதனை எதிர்த்துப் போராட வேண்டியதன் அவசியத்தையும், அமைப்பையும் தெளிவுபடுத்த வேண்டும் என்ற அவாவுமே இதற்குக் காரணமாகும்.

இமாம் ஹுஸைன் அவர்கள் முஹர்ரம் பத்தாம் நாள், ஆசூரா தினம், போர்க்களம் இறங்கி, தமது முழு அளவிலான போராட்டத்தை ஆரம்பித்தார்கள். அப்போது, சண்டாளன் ஒருவன் ஆக்ரோஷமாக வீசிய ஈட்டியின் கூரிய முனை, இமாமவர்களின் நெஞ்சைத் துளைத்து இருதயத்தைக் கிழித்துக் குருதி கொட்டச் செய்தது. வலியின் ஆர்த்த அழுத்தத்தினால், உடல் தளர்ந்து போன இமாம் ஹுஸைன் அவர்கள், நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டே, குதிரையிலிருந்து கீழே விழுந்தார்கள்.

அந்த சந்தர்ப்பத்திலும் தமது கொள்கையை விட்டுக் கொடுக்க அவர்கள் சற்றும் எண்ணங் கொள்ளவில்லை. ஈட்டி பாய்ந்து துளைத்த தமது புனித மிகு நெஞ்சை கிப்லாவின் பக்கம் திருப்பியவர்களாக இறைவனை அழைத்துப் பிரார்த்தித்தார்கள். "அல்லாஹ்! உனது தீர்ப்பை ஏற்று திருப்தியடைகின்றேன். உனது கட்டளைக்கு சரணாகதியடைகின்றேன். உதவி தேடுவோர்க்கெல்லாம் உதவுபவனே! உன்னைத் தவிர வணங்கி வழிபடத் தகுதியானவன் வேறுயாருமில்லை" என்று சாட்சியும் பகர்ந்தார்கள்.

رضا بقضائك وتسليما لأمرك ولا معبود سواك يا غياث المستغيثين

ஈட்டி பாய்ந்து நெஞ்சைத் துளைத்த பின்னும், கொள்கையை விட்டுக் கொடுக்காத இமாம் ஹுஸைனின் இதய வலிமையும், ஈமானிய பலமும் எத்தகைய சிறப்பும் மகத்துவமும் கொண்டது என்பதை எண்ணிப் பார்ப்பது சமூகத்தின் தேவையாகும்.

ولا حول ولا قوة إلا بالله العلي العظيم

## 06) விம்மி அழுத வீர மங்கை ஹஸ்ரத் பீவி ஸைனப்

உயிரோட்டமுள்ள ஒரு சமூகத்தின் வாழ்வுக்கு தன்மானமும், சுயகௌரவமும், கொள்கைப் பிடிப்பும் இன்றியமையாததாகும். இவற்றின் அடைவை அறிவின் மூலமாக நிவர்த்தி செய்கின்ற போதே அந்த சமூகம் மரியாதைக்கும், கௌரவத்திற்கும் உரிய சமூகமாக மாற்றம் பெற முடியும். அத்தகைய அறிவு நிலையில் தேர்ச்சி பெறுவது, குறித்த சமூகத்தின் வளர்ச்சிக்கும், எழுச்சிக்கும் வித்தாக அமையும் எனில் அது மிகையன்று.

இமாம் ஹுஸைன் அவர்களது இஸ்லாமிய புரட்சியில் பரந்து கிடந்த அறிவுத் தேடலையும், எழுச்சிக் கோட்பாட்டையும்,

சுதந்திர-தன்மான கொள்கைகளையும் நன்கு தெரிந்து கொண்டவர்கள் அவர்களது பிரிய சகோதரியான பீபி ஸைனப் நாயகி அவர்களாவர். பெண்கள் திலகம் பாத்திமாவினதும், வீரப் புருஷர் ஹஸ்ரத் அலியினதும் அருமைப் புதல்வியாக விளங்கிய ஸைனப் நாயகி, தமது பெற்றோரிடமிருந்தும், உறவினர்களிடமிருந்தும் அறிவொழுக்கத்தையும், வீர உணர்வையும், சுதந்திர வேட்கையையும் கற்றுக் கொண்டிருந்தார்கள். மார்க்கத்தின் மீது மிக்க அறிவும், ஆழ்ந்த பற்றும் கொண்டு காணப்பட்டார்கள். மனோதிடமும், வீரமும், விவேகமும் அவர்களிடம் நிறைந்திருந்தன.

கர்பலா நிகழ்வு நடந்தேறிய பின், சுமார் 32 நாட்கள் ஸைனப் நாயகி உள்ளிட்ட இமாம் ஹுஸைனின் உறவினர்கள் அனைவரும் சிறைப்பிடிக்கப்பட்டு, பல்வேறு இன்னல்களுக்கும் அலைக்கழிப்புகளுக்கும், வேதனைகளுக்கும் மத்தியில், ஷாம் நகருக்குக் கொண்டு செல்லப்பட்டனர். இது ஸபர் மாதம் இரண்டாம் நாள் இடம்பெற்றது. பீபி ஸைனப் அவர்கள், எசீதின் தந்தையினால் கட்டப்பட்ட பச்சை நிற ஆடம்பர மாளிகைக்கு அழைத்து வரப்பட்டார்கள். அவர்களோடு, ஆசூரா தினத்தன்று நோய்வாய்ப்பட்டிருந்ததனால் உயிர் தப்பியிருந்த இமாம் ஸைனுல் ஆபிதீன் அவர்களும், மற்றும் சிலரும் இருந்தனர். அனைவரும் சங்கிலியினால் பிணைக்கப்பட்டவர்களாக அங்கு அழைத்துவரப்பட்டனர்.

எசீத் அமர்ந்திருக்கும் அறைக்குச் செல்வதானால், சுமார் ஏழு மண்டபங்களைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது. அத்தகைய விசாலமும், ஆடம்பரமும் கொண்டதாக அம்மாளிகை அமைந்திருந்தது. அவைக்கு அழைத்து வரப்பட்ட போது, எசீதின் இடாம்பீகத் தோற்றம் ஸைனப் அவர்களது கண்களைத் தைத்தது. முத்துக்களும், தங்கமும் பொறிக்கப்பட்ட ஆடம்பர சிம்மாசனத்திலே எசீதும், தங்க முலாமிடப்பட்ட இருக்கைகளிலே அவரது அமைச்சர்கள், அதிகாரிகள், வெளிநாட்டுத் தூதுவர்களும் பெருமிதமாக அமர்ந்திருப்பதைக் கண்டார்கள்.

ஆனால், இஸ்லாத்தை உலகுக்கு கொண்டு வந்த இறைத்தூதர் நபி (ஸல்) அவர்களின் பரிசுத்த குடும்பத்தினராகிய தாங்களோ அலைக்கழிக்கப்பட்டு,

அவமானப்படுத்தப்பட்டவர்களாக சங்கிலிகளால் பிணைக்கப்பட்ட நிலையில் அவர்களின் முன் நிற்பதை எண்ணிப் பார்த்தார்கள். அந்த சந்தர்ப்பதிலும் மனதைத் தளர விடாமலும், தைரியத்தை விட்டு விடாமலும் துணிவுடன் எசீதை எதிர்நோக்கிய ஸைனப் நாயகி அவர்கள், சத்தமிட்டுக் கோஷமெழுப்பினார்கள்;

"ஏ எசீதே! பூமியிலுள்ளோர் அனைவரையும், வானவர்களையும் ஒன்று திரட்டி, எம்மைக் கைதிகளாகக் கட்டி இழுத்து வருவதனால், எமக்கு இழிவும், உமக்கு உயர்வும் கிடைத்து விட்டது என நீர் எண்ணிக் கொள்கின்றீரா?" என வீர முழக்கமிட்டார்கள். அதாவது, நான் எசீதை மரியாதைக்குரியவராகவோ, ஒரு நல்ல மனிதராகவோ காணவில்லை. மாறாக, அருவருப்பும், அவமானத்திற்கும் முழுக் கட்டுகையுடைய ஒரு கெட்ட மனிதராகவே காண்கின்றேன் என்பதே அவர்களது கூற்றின் உள்ளர்த்தமாகும்.

أظننت يا يزيد، حيث أخذت علينا أقطار الأرض وآفاق السماء، فأصبحنا نساق كما تساق الأسارى. أنّ بنا على الله هوانا، وبك عليه كرامة؟ (مقتل الحسين امام المقرم)

ஸைனபின் வார்த்தைகள் அவ் அவையிலே பரபரப்பையும், சலசலப்பையும் ஏற்படுத்தின. புரட்சியின் சாயலிலான தோற்றப்பாடுகளின் உருவாக்கத்திற்கு களம் அமைக்கும் ஆழ்ந்த அகவுணர்வை அவை தாங்கியிருந்தன. இதனால், ஸைனபையும், அவர்களோடு இருந்த ஏனைய இமாம் ஹுஸைனின் குடும்ப உறுப்பினர்களையும் பாதுகாப்பாக தாயகத்திற்கு அனுப்பி வைக்க வேண்டிய நிர்ப்பந்த நிலை எசீதுக்கு ஏற்பட்டது. அத்தோடு, இமாம் ஹுஸைனைக் கொலை செய்ததான அடாத செயலின் மூலமான பொது எதிர்ப்பைத் தவிர்த்துக் கொள்ளும் வகையில் தனது குற்றத்தை மறுத்துரைக்கவும் தலைப்பட்டார். பொதுமக்களிடம், "இமாம் ஹுஸைனைக் கொலை செய்யும் படியான கட்டளையை நான் பிறப்பிக்கவில்லை. இப்னு ஸியாதுதான் இதனைச் செய்தான். அவனுக்கு இறைவனின் சாபம் உண்டாவதாக" என்று பாசாங்காகக் கூறினார்.

இதனைக் கேட்டுக் கொண்டிருந்த ஹஸ்ரத் ஸைனப் அவர்கள், எசீதை நோக்கி, "ஏய் எசீதே! நீர உமது சதித்திட்டத்தை தீட்டலாம். உமது முயற்சியை மேற்கொள்ளலாம். உமது நடவடிக்கையை நிலைநிறுத்தலாம். ஆனாலும், இறைவன் மீது ஆணையாக, எமது ஞாபகத்தை உம்மால் அழித்து விட முடியாது. எமது இறைஞானம் என்றும் மரணித்து விடாது" என்று வீராவேசமாக மொழிந்தார்கள். ஈற்றில், விடுவிக்கப்பட்டு தாயகம் திரும்பினார்கள்.

يا يزيد كد كيدك واسع سعيك وناصب جهدك

فوالله لا تمحو ذكرنا ولا تميت وحينا

தாயகத்திற்கு வந்தபின் பீ ஸைனப் அவாகள், அறப்பணிகளில் முழுமையாக தம்மை ஈடுபடுத்திக் கொண்டதோடு, இமாம் ஹுஸைன் விட்டுச் சென்ற பணியை தொடர்ந்து முன்கொண்டு சென்றார்கள்.

இமாம் ஹுஸைன் அவர்கள், கர்பலாவில் தமது போராட்டத்தை ஆரம்பிப்பதற்கு முன், ஹஸ்ரத் ஸைனபுடன் சற்று நேரம் உரையாடினார்கள். சூழ்நிலையின் கனத்தை உணர்ந்து கண்ணீர் உகுத்துக் கொண்டிருந்த ஸைனப் அவர்கள், அழுகையின் பிரவாகத்தில் இமாமவர்களது மடியிலே மயக்கமுற்றுச் சரிந்தார்கள். தெளிந்தபின், அவர்களை ஆதரவுடன் நோக்கிய இமாமவர்கள், "சகோதரியே! உங்கள் மீது ஷைத்தான் ஆதிக்கம் செலுத்தாதிருக்கட்டும். நான் மரணித்து விடுவேன். அதையிட்டு நீங்கள் கவலை கொள்ளாது, எமது குடும்பத்தை பாதுகாப்பாக தாயகத்துக்கு அழைத்துச் சென்று சேர்க்க வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள்.

மேலும், "ஸைனபே! எமது பாட்டனார் மரணித்ததை நீங்கள் பார்க்கவில்லையா? அவர்கள் என்னை விடவும் மிக உயர்ந்தவர்கள். எமது தந்தை மரணித்ததை நீங்கள் பார்க்கவில்லையா? அவர்கள் என்னை விடவும் மிகவும் சிறந்தவர்கள். எமது தாயும் இவ்வாறுதான். ஆகவே, எனது மரணத்தை நினைத்து நீங்கள் கவலை கொள்ள வேண்டாம்" என்று வேண்டினார்கள்.

அது கேட்ட பீபி ஸைனப் அவர்கள், "சகோதரரே! எமது பாட்டனார் மரணித்து விட்டார்கள். எமது தந்தை, தாய், சகோதரர் ஹஸன் அனைவரும் சென்று விட்டார்கள். இறுதியாக இவர்கள் அனைவரினதும் ஞாபகார்த்தமாக உங்களைத்தானே நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். இப்போது நீங்களும் சென்று விட்டால், எனக்கான புகலிடத்தை யாரிடம் சென்று தேடுவேன். எனக்கான ஆறுதல் வார்த்தைகளை யாரிடம் பெற்றுக் கொள்வேன்" என்று பிரலாபித்தவர்களாக கண்ணீர் வடித்து அழுதார்கள். அந்த கூடாரம் எங்கும் சோகமும், கவலையும் உறைந்து படர்ந்திருந்தன.

## 07. முற்றுகையிடப்பட்ட முஸ்லிம் இப்னு அகீல்

எசீத் ஆட்சிக்கு வந்த பின், அவ் ஆட்சியின் மீதான நம்பிக்கையிழந்த கூபாவாசிகள், இமாம் ஹுஸைனுக்கு தொடர்ச்சியாக கடிதங்களை அனுப்பி, கூபாவுக்கு வருமாறும், ஆட்சிப் பொறுப்பை கையேற்குமாறும் அழைப்பு விடுத்துக் கொண்டிருந்தார்கள். இதனால், இமாம் ஹுஸைன் அவர்கள் கூபாவின் நிலைமைகளை அறிந்து வருவதற்காக தமது அன்புச் சகோதரர் முஸ்லிம் இப்னு அகீல் அவர்களை அனுப்பி வைத்தார்கள்.

கூபாவைச் சென்றடைந்த முஸ்லிமுக்கு பலமான வரவேற்பும், ஆதரவும் வழங்கப்பட்டது. சுமார் முப்பதாயிரம் பேர், அவர்களிடம் சத்தியப்பிரமாணம் செய்து தமது ஆதரவை வலுப்படுத்திக் கொண்டனர். இதேவேளை, எசீதினால் கூபாவில் ஆங்காங்கே பரப்பி விடப்பட்டிருந்த உளவாளிகள், கூபாவின் நிலை பற்றி எசீதுக்கு தொடர்ச்சியாக செய்திகளை அனுப்பிக் கொண்டேயிருந்தனர். நிலைமை கட்டுக்கடங்காது சென்று விடும் என்று பயந்த எசீத், கூபாவாசிகளை அடக்கி அவர்களைத் தனது கட்டுப்பாட்டில் வைத்திருப்பதற்கான வழிமுறை பற்றி தீவிரமாக சிந்திக்கத் தொடங்கினார். ஈற்றில் கொடுங்கோலனான உபைதுல்லாஹ் இப்னு ஸியாதை அங்கு கவர்னராக அனுப்புவதெனவும் தீர்மானித்தார்.

அகீல் அவர்கள், நிலைமை சாதகமாக இருப்பதாகவும், உடனே பயணத்தைத் தொடங்குமாறும் கோரி, இமாம் ஹுஸைனுக்கு ஒரு கடிதம் அனுப்பினார்கள்.

ஆனால், எசீதின் பணிப்பின் பேரில் கூபாவுக்கு வந்து விட்டிருந்த உபைதுல்லாஹ்வினால் முஸ்லிமின் மீதும், அவரை ஏற்று விசுவாசப் பிரமாணம் செய்தவர்கள் மீதும் அடக்குமுறைகள் கட்டவிழ்த்து விடப்பட்டன. அச்சுறுத்தல்கள் விடுக்கப்பட்டன. பயங்கரமும், பீதியும் எங்கும் தலைவிரித்தாடியது. உபைதுல்லாஹ்வின் அக்கிரமச் செயல்கண்டு அச்சத்திற்குள்ளாகிப் போன கூபாவாசிகள், கொஞ்சம் கொஞ்சமாக முஸ்லிமுக்கான தமது ஆதரவிலிருந்து பின்வாங்கத் தலைப்பட்டனர்.

முஸ்லிம், கூபாவுக்கு வந்த போது, சுமார் முப்பதாயிரம் பேர் அவர்களுக்குப் பின்னால் நின்று தொழுதார்கள். உபைதுல்லாஹ்வின் அக்கிரமங்கள் ஆரம்பித்தவுடன் இத்தொகை சரிபாதியாகக் குறைந்து போனது. ஒவ்வொரு தொழுகையின் போதும் மக்கள் தொகை குறைந்து கொண்டே சென்று, இறுதியில் அன்றைய இஷாத் தொழுகையின் பின், முஸ்லிம் பின்னால் திரும்பிப் பார்த்த போது, யாருமற்ற நிலையில் தான் தன்னந்தனியாக்கப்பட்டு விட்ட அவல நிலையை உணர்ந்தார்கள். உள்ளம் உடைந்து வெதும்பினார்கள். கூபாவாசிகளின் ஏமாற்றும், எசீத் படையினரின் அக்கிரமமும் அவர்களது மனதை நைத்து வருத்தின.

கவலை தோய்ந்த முகத்துடன் பள்ளிவாயலை விட்டு வெளியே வந்தவர்கள். கூபா நகர வீதிகளில் தனிமையில் நடந்து கொண்டிருந்தார்கள். முஸ்லிமை எங்கு கண்டாலும் கைது செய்யும் படியான உபைதுல்லாஹ்வின் கட்டளை நகரெங்கும் அமுலிலிருந்ததை அவர்களால் அறிய முடிந்தது. இமாம் ஹுஸைனுக்கு கூபாவின் தற்போதைய நிலையை தெரியப்படுத்த வேண்டுமே என்ற கவலை அவர்களை வாட்டியது. அதுவரை தமது உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டியதன் அவசியத்தையும் உணர்ந்தார்கள். அதற்காக தனக்கு ஒரு புகலிடம் பெற்றுக் கொள்ள வேண்டுமென விரும்பி, ஒரு வீட்டின்

கதவைத் தட்டினார்கள். அவ்வீட்டினுள் இருந்த உம்முஹ்றானி என்ற பெண்மணி, வெளியே வந்து "பரதேசியே! நீ யார்? ஏன் இந்த நேரம் இங்கு வந்து கதவைத் தட்டுகிறாய்?" என்று வினவினார். முஸ்லிம், தம்மை அறிமுகப்படுத்திக் கொண்ட போது, திடுக்கமுற்ற அப்பெண்மணி, உடனே அவரை உள்ளே அழைத்து புகலிடம் கொடுத்தார். இமாம் ஹுஸைனின் தூதுவருக்கு புகலிடம் வழங்கக் கிடைத்த நிகழ்வை பெரும் பாக்கியமாக அவர் கருதினார்.

ஆயினும், எதிரிப் படையினர், முஸ்லிமின் மறைவிடத்தை உளவாளிகள் மூலம் அறிந்து கொண்டனர். அங்கு வந்து முஸ்லிமுடன் போராடி அவரை சிறைப்பிடித்தனர். கைகளைப் பிணைத்து, உபைதுல்லாஹ்வின் மாளிகைக்கு அழைத்து வந்தனர். அங்கே ஏளனமான கேலிச் சிரிப்புகளுக்கு மத்தியில் பல்வேறு அவமானங்களுக்கு உள்ளான முஸ்லிம் அவர்கள், இறுதியாக மாளிகையின் உச்சிக்குக் கொண்டு செல்லப்பட்டு, மிக உயரமான அவ்வுச்சியிலிருந்து திடீரெனக் கீழே தள்ளிவிடப்பட்டார்கள். உடல் சிதைவுற, உதிரம் கொப்பளிக்க அவ்விடத்திலேயே முஸ்லிம் இப்னு அகீல் ஷஹீதாகி உயிர்நீத்தார்கள்.

முஸ்லிமின் பரிதாபமான வீரமரணத்தை அறிந்த போது, இமாம் ஹுஸைனுக்கு தாங்க முடியாத வேதனை ஏற்பட்டது. கண்களில் நீர் வடிய சத்தமின்றி அழுதார்கள். பின்வரும் இறைமறை வசனத்தை ஓதிக் காண்பித்தார்கள்.

"விசுவாசிகளில் சில ஆடவர்கள் இருக்கின்றார்கள். எதன் மீது அவர்கள் அல்லாஹ்விடம் வாக்குறுதி செய்தார்களோ, அதை உண்மையாக்கி வைத்தார்கள். ஆகவே, அவர்களில் தங்கள் இலட்சியத்தை (வீரமரணத்தை) அடைந்து விட்டவரும் இருக்கின்றனர். அவர்களில் (அதற்காக) எதிர்பார்ப்பவரும் இருக்கின்றனர். (தங்கள் வாக்குறுதியில்) அவர்கள் மாறிவிடவேயில்லை" (அல்குர்ஆன் - 33:23)

இங்கு இமாமவர்களின் உறுதியான மனோநிலை நன்கு கவனிக்கத்தக்கதாகும். எதிரிப் படையினர் கூபாவைக்

கைப்பற்றி விட்டார்கள்; இனி தாம் அங்கு செல்ல வேண்டிய அவசியமில்லை என்றெண்ணி, இமாமவர்கள் கூபாவுக்கான தமது பயணத்தை மாற்றிவிடவில்லை. மாறாக அதனை மீண்டும் தொடர்ந்தார்கள். அவர்கள் ஓதிக் காண்பித்த இறைவசனத்தின் மூலமாக முஸ்லிம் இப்னு அகீலின் கடமையை அவர் நிறைவேற்றி விட்டார் என்பதையும், தமது கடமை எஞ்சியிருக்கிறது என்பதையும், அதனை நிறைவேற்றுவது அவசியம் என்பதையும் சூசகமாக சுட்டிக் காட்டியுள்ளார்கள்.

இச்சந்தர்ப்பத்திலே இமாம் ஹுஸைனுடன் முஸ்லிம் இப்னு அகீலுடைய மனைவி, பிள்ளைகள் உள்ளிட்ட குடும்பத்தினர்களும் இருந்தனர். அவர்களுக்கு முஸ்லிமின் மரணச் செய்தியை எவ்வாறு தெரியப்படுத்துவது என்று இமாமவர்கள் மனம் புழுங்கினார்கள். ஆயினும் அதனை மறைத்து வைப்பது முறையானதல்ல என்பதையும் அவர்கள் உணர்ந்தார்கள்.

முஸ்லிமுக்கு மழலை மொழி பேசக் கூடிய ஒரு அழகிய பெண்குழந்தை இருந்தது. அந்தக் குழந்தையை அழைத்து தமது மடியில் இருத்திக் கொண்ட இமாமவர்கள், அதன் தலையை தடவிக் கொடுத்து ஆதரவாக அரவணைத்துக் கொண்டார்கள். விவேகமும், மதிநுட்பமும் வாய்க்கப் பெற்றிருந்த அக்குழந்தை, இமாமவர்களை நோக்கி, "எனது தந்தை எங்கே? அவர் மரணித்து விட்டால் எங்கள் நிலை என்னாகும்?" என்று மழலைக் குரலில் வினவியது.

அது கேட்டு உருகிப் போன இமாமவர்கள், "என் உயிரே! உனது தந்தைக்குத் தந்தையாக நானிருக்கிறேன். அவருக்குப் பின் அவரது இடத்தில் உனக்கு நானிருப்பேன்" என்று உணர்ச்சி பொங்கக் கூறினார்கள்.

இந்நிகழ்வை அவதானித்துக் கொண்டிருந்த அனைவரும், முஸ்லிமின் மரணத்தை அறிந்து கொண்டார்கள். தாங்க முடியாத வேதனையில் ஆழ்ந்து உள்ளம் உடைந்து அழ ஆரம்பித்து விட்டார்கள். இமாம் ஹுஸைன் அவர்கள், முஸ்லிமின் குடும்பத்தினரை நோக்கி, "அகீலின் குடும்பத்தினரே! எனக்காக உங்களது குடும்பத்தினர் ஒருவரை

*இழந்து விட்டீர்கள். இந்த இழப்புகள் போதும். நீங்கள் விரும்பினால், இங்கிருந்து சென்று விடுங்கள்" என்று வேண்டிக் கொண்டார்கள்.*

*ஆனால், அங்கிருந்த முஸ்லிமின் குடும்பத்தினரோ, "இமாமவர்களே! எமது குடும்பத்தில் ஒருவர் மட்டுமே எஞ்சியிருந்தாலும் உம்மை விட்டும் சற்றும் பின்வாங்கிவிட மாட்டோம். மேலும், முஸ்லிமின் கொலைக்குப் பழிவாங்காமலும் விடமாட்டோம்" என சூளுரைத்தார்கள்.*

ولا حول ولا قوة الا بالله العلي العظيم

## 08. அலி அக்பரின் அவல மரணம்.

*கர்பலா நிகழ்வு இடம்பெறும் போது, அங்கிருந்த இளைஞர்கள், சிறுவர்கள் என பலரும் யுத்தம் செய்வதற்காக இமாம் ஹுஸைனிடம் அனுமதி வேண்டி நின்றனர். அவர்களுள் இமாமவர்களின் மூத்த புதல்வரான அலிஅக்பர் அவர்களும் ஒருவராவார். இமாமவர்கள் தமது பிள்ளை மீது மிக்க அன்பும், இரக்கமும் கொண்டிருந்தார்கள். அலிஅக்பரின் உருவமைப்பு, நபி (ஸல்) அவர்களின் உருவத் தோற்றத்தை முழுமையாக ஒத்ததாக இருந்தது. அவர்களது குண ஒழுக்கம், குரல்வளம், பேச்சுத்தன்மை முதலானவையும் அவ்வாறே இருந்தன. நபிகளாரின் ஞாபகார்த்தமாக அவர்களையே பலரும் நோக்கியிருந்தார்கள்.*

*இந்நிலையில், அலிஅக்பர் அவர்களும் யுத்தத்திற்காக அனுமதி வேண்டி நின்ற போது, இமாமவர்களுக்கு அச்சோகத்தைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. நம்பிக்கையிழந்ததான ஒரு பார்வையை அவர் மேல் படரவிட்டார்கள். அனுமதி பெற்றுக் கொண்டு அலிஅக்பர் நடந்து சென்ற போது, அவருக்குப் பின்னால் இமாமவர்களும் சிறிது தூரம் நடந்து சென்று, "இறைவனே! அனைவரை விடவும்*

அண்ணல் நபிக்கு உவமையாக இருந்த இந்த இளைஞர் யுத்தம் புரியச் செல்வதற்கு நீயே சாட்சியாக இருப்பாயாக!" எனப் பிரார்த்தித்தார்கள்.

களமிறங்கிப் போராடிய அலிஅக்பர் அவர்கள், வீராவேசமாகப் போராடினார்கள். நடுவில் கூடாரத்திற்கு திரும்பி வந்து தந்தையை சந்தித்தார்கள். "தந்தையே! பெரும் ஆயுதங்களின் அதீத பாரம் என்னைக் கஷ்டப்படுத்துகின்றது. தாகம் என்னை வாட்டி வதைக்கின்றது. எனது நா மிக மோசமாக வரண்டு போய்விட்டது. ஒரு சொட்டுத் தண்ணிரேனும் என் வாயினுள் ஊற்றுங்கள். நான் பலம் பெற்று மீண்டும் போருக்குப் புறப்படுகிறேன்" என்று வேண்டி நின்றார். இமாம் ஹுஸைன் அவர்கள் புதல்வரின் தாகத்தையுணர்ந்து மிகுந்த உளவேதனையுற்றவர்களாக, "என் அன்பு மகனே! எனது நாவைப் பாருங்கள். உங்களது நாவை விடவும் மிகவும் வரண்டு போயுள்ளது. உங்களுக்குத் தருவதற்கு இங்கு தண்ணீருமில்லை. ஆனாலும், நான் உங்களுக்கு ஒரு வாக்குறுதியளிக்கின்றேன். உங்களது பாட்டனார் பயகம்பர் (ஸல்) அவர்களது கரத்தினால் நீங்கள் தண்ணீர் அருந்துவீர்கள்" எனக் கூறினார்கள். தந்தையின் வாக்குறுதியில் ஆன்மீகப் பலம் பெற்ற அலிஅக்பர் அவர்கள், மீண்டும் களம் புகுந்து வீரத்துடன் போரிட ஆரம்பித்தார்கள்.

யுத்தம் நிகழ்ந்த இடத்திலிருந்து அதனை அவதானித்துக் கொண்டிருந்த ஹுமைத் இப்னு முஸ்லிம் என்பவர் அறிவிப்புச் செய்கின்றார்; "நான் ஒரு மனிதன் அருகே நின்றிருந்தேன். அலிஅக்பருடன் மோத வருபவர்களெல்லாம் அவரைத் தாக்குப் பிடிக்க முடியாமல் விரண்டோடிக் கொண்டிருந்தனர். இந்நிலையில், என்னருகே நின்ற மனிதன், 'அலிஅக்பர் இவ்விடத்திற்கு வருவாரானால், அவரைக் கொன்றொழித்து விடுவேன்' என விகாரமாகக் கூறிக் கொண்டிருந்தான். அவ்வாறே அலிஅக்பரும் சண்டை செய்து கொண்டே அவ்விடத்திற்கு வந்தார். உடனே அம்மனிதன், அலிஅக்பரின் கவனத்தை வேறுபக்கம் திசை திருப்பி விட்டு, மிகக் கூரான ஈட்டியினால் அவரது உடலைக் குத்திக் காயப்படுத்தினான். திடீர்த் தாக்குதலில் செயலற்றுப் போன அலிஅக்பர், உடலில் ஏறிய ஈட்டியின் வலியைப் பொறுக்க

கிடத்தினார்கள். தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள சக்தியற்றுப் போனார்கள். அந்த வலியுடன், "என் அன்புத் தந்தையே! இதோ றசூலுல்லாஹ் அவர்கள்!" எனச் சத்தமிட்டவாறே குதிரையிலிருந்து கீழே விழுந்து ஷஹீதாகிப் போனார்கள்.

அந்தக் குதிரை, தன் மேல் சவாரி செய்ய யாருமின்றி தனியே அங்குமிங்கும் ஓடித் திரிந்தது. இறுதியாக எதிரிகளின் கூடாரத்தின் பக்கம் சென்றது. எதிரிகளோ, இது அலிஅக்பரின் குதிரை என்பதை அறிந்ததும், தமது வாளினால் அதனைக் கண்டதுண்டமாக வெட்டியெறிந்தார்கள்.

فاحتمله الفرس إلى عسكر الأعداء فقطّعوه بأسيافهم إربا إربا

## 09. சிறுவர்களின் வீரம்.

கர்பலாக் களத்தில், இமாம் ஹுஸைனுக்கு ஆதரவாகப் போராடிய இளைஞர்களோடு பல சிறுவர்களும் போராடி உயிர் நீத்தார்கள். ஒரு சிறுவர், இமாமவர்களிடம் வந்து போர்க்களம் செல்ல தனக்கு அனுமதி வழங்குமாறு பணிவுடன் வேண்டி நின்றார். அவரது தந்தையும் யுத்தத்திலேயே கொலை செய்யப்பட்டிருந்ததனால், அவரையும் யுத்தத்திற்கு அனுப்ப இமாமவர்கள் மனமொப்பவில்லை. "உங்களது தாயார், தம் கணவரை இழந்து விட்டார்கள். உங்களையும் இழக்க அவர்கள் விரும்பமாட்டார்கள்.

ஆகவே, நீங்கள் யுத்தத்திற்குச் செல்ல வேண்டாம்" என இமாமவர்கள் கூறிய போது, "தலைவரே! இதோ என்னுடைய இடுப்பிலே தொங்கிக் கொண்டிருக்கக் கூடிய இந்த வாளை எனக்குத் தந்து அனுப்பியதே என் தாயார்தான். உனது தந்தையைப் போன்றே நீயும் இமாம் ஹுஸைனுக்காக உயிர் தியாகம் புரிந்து வீர சுவர்க்கம் அடைவாயாக! என வாழ்த்தி அவர்கள் என்னை இங்கு அனுப்பி வைத்தார்கள்" என்று அச்சிறுவர் கூறினார். அந்தத் தாயின் மார்க்கப்பற்றையும், தியாக உணர்வையும் நினைந்து உளம் கசிந்துருகிய



என்று அச்சிறுவர் கூறினார். அந்தத் தாயின் மார்க்கப்பற்றையும், தியாக உணர்வையும் நினைந்து உளம் கசிந்துருகிய இமாமவர்கள், அச்சிறுவரை ஆதரவுடன் தடவி யுத்தத்திற்கு அனுமதி வழங்கி அனுப்பி வைத்தார்கள்.

போர்க்களம் புகுந்த அச்சிறுவர், எதிரிகளை நோக்கி, "எதிரிப் படையினரே! தலைவர்களில் சிறந்தவராகிய இமாம் ஹுஸைனை என் தலைவராக ஏற்றுக் கொண்டவன் நான். அவர்கள், இறைத் தூதரின் உள்ளத்தை மகிழ்வுறச் செய்தவர்கள். (அவர்களுக்காகவே யுத்தம் செய்ய நான் வந்துள்ளேன்)" என்று கூறியவர்களாக வீரதீரத்துடன் போராடி உயிர் நீத்தார்கள்.

أميري حسين ونعم الأمير سرور فؤاد البشير النذير
(مناقب ابن شهر آشوب )

அவ்வாறே இமாம் ஹுஸைன் அவர்களது சகோதரரான ஹஸனின் புதல்வர் அப்துல்லாஹ் என்பவரும் இமாமவர்களிடம் யுத்தத்திற்கு அனுமதி வேண்டி நின்றார். அவர் மிகச் சிறுவராக இருந்ததனால், இமாமவர்கள் அவருக்கு அனுமதி வழங்க மறுத்து விட்டார்கள். அவரை களத்திற்குள் நுழைய விட்டுவிடாது பாதுகாப்பாக வைத்திருக்குமாறு தமது சகோதரி ஸைனபிடம் கண்டிப்பாகக் கூறியுமிருந்தார்கள்.

இமாம் ஹுஸைன் அவர்கள் போர்க்களம் சென்று சண்டையில் ஈடுபட்டுக் கொண்டிருந்த வேளையில் சிறுவர் அப்துல்லாஹ், தாமும் களம் செல்ல விழைந்த போதும், ஸைனப் அவர்கள் அவருக்கு அனுமதி வழங்கவில்லை.

எனினும், இறுதித் தருணத்தில், இமாமவர்கள் சண்டையிட்டுச் சோர்வுற்றிருந்த சந்தர்ப்பத்திலே அனைவருடைய தடையையும் தாண்டி, சிறுவர் அப்துல்லாஹ் போர்க்களம் நுழைந்தார். இமாம் ஹுஸைனை அண்மித்துச் சென்றார். மிக ஆபத்தான ஒரு சந்தர்ப்பத்திலே களத்தில் தமது அன்பு மகனைக் கண்டதும் திடுக்கிட்ட இமாமவர்கள், அவரை வாரியணைத்துத் தழுவிக் கொண்டார்கள்.

இந்நிலையில், எதிரிப் படையைச் சேர்ந்த ஒருவன்,

கண்டித்து வினாவெழுப்பினார்கள்.

ஆயினும், தனது வாளை ஏந்திய அவன், இமாமவர்களை நோக்கி ஆவேசமாக வீசிய போது, அதனைத் தடுப்பதற்காக, சிறுவர் அப்துல்லாஹ் தமது கையை நீட்டினார். அந்தோ பரிதாபம்! சிறுவரின் சின்னஞ் சிறிய கை துண்டாகிக் கீழே தொங்க ஆரம்பித்து விட்டது. வலியின் அழுத்தத்தில் சடைவுற்றுப் போன சிறுவர், இமாமவர்களை நோக்கி, "என் சிறிய தந்தையே! இவர்கள் எனக்கு என்ன செய்து விட்டார்கள் பார்த்தீர்களா?" என்று பரிதாபத்துடன் கேட்டழுதார்கள்.

ولا حول ولا قوة إلا بالله العلي العظيم

## 10. இமாம் ஸைனுல் ஆபிதீன் அவர்களும், ஸைனப் நாயகியும்.

கர்பலா நிகழ்வு, இரத்தக் கறைகளுடனும், சிதைந்த உடலுறுப்புகளுடனும் முடிவுற்றது. சிறைப்பிடிக்கப்பட்டிருந்த பெண்கள், சிறுவர்கள், ஏனையோர் தலைநகருக்கு அழைத்துச் செல்லப்படத் தயாராகினர். ஸைனப் நாயகி அவர்கள், படையினரை நோக்கி, "அல்லாஹ்வுக்காக, எம்மை அழைத்துச் செல்லும் போது எமது சகோதரர் ஹுஸைன் கொலை செய்யப்பட்டிருக்கக் கூடிய இடம் வழியாக அழைத்துச் செல்லுங்கள்" என வேண்டினார்கள். ஏனெனில், இறுதியாக இமாமவர்களை பார்த்து, தம் கவலைகளைக் கொட்டிவிட வேண்டுமென அவர்களது உள்ளம் அவாவுற்றிருந்தது.

قلن : بحق الله إلا ما مررتم بنا على مصرع الحسين
(مقتل الحسين إمام المقرم)

அனைவரும் வாகனங்களில் ஏற்றப்பட்டனர். கடுமையாக நோய்வாய்ப்பட்டிருந்த இமாம் ஸைனுல் ஆபிதீன் அவர்கள் ஒரு குதிரையின் மீது ஏற்றப்பட்டார்கள். கீழே விழுந்துவிடாதவாறு அவர்களது கால்களிரண்டும் பிணைத்துக் கட்டப்பட்டன. எல்லோரும் அவ்வழியாக அழைத்துச் செல்லப்பட்டுக் கொண்டிருந்த வேளையில், தமது நண்பர்கள்,

*உறவினர்கள் கொலை செய்யப்பட்டுக் கிடக்கும் இடத்திற்கு அருகாமையால் அவர்கள் வந்தார்கள்.*

*உடனே, வீர மங்கை ஹஸ்ரத் ஸைனப் நாயகி அவர்கள், குதிரையை விட்டுக் கீழிறங்கி, தமது சகோதரரைத் தேடி ஓடினார்கள். பதைபதைக்கும் நெஞ்சுடன் அங்குமிங்கும் பார்வையை சுழல விட்டார்கள். ஒரு புறத்தில் தலை துண்டிக்கப்பட்ட நிலையில் இரத்தத்தில் உறைந்து, புழுதியில் தோய்ந்து அசைவற்றுக் கிடக்கும் உடல் தமது பிரியத்துக்குரிய சகோதரர், சுவனத் தலைவர் இமாம் ஹுஸைனின் உடல்தான் என்பதை அடையாளங்க கண்டதும், அந்த ஆழ்ந்த சோகத்தைத் தாங்கிக் கொள்ளத் திராணியற்று தேம்பித் தேம்பி அழுதார்கள். அவர்களது கண்களிரண்டிலும் கண்ணீர் ஆறாகப் பெருக்கெடுத்தோடியது.*

*"சோகத்தில் உழன்றவர் சோபையிழந்து விட்டார்;*
*தாகத்தில் தவித்தவர் தணிந்து சென்று விட்டார்"*
*என கவலையில் நெஞ்சுருகிப் பாடினார்கள்.*

بأبي المهموم حتّى قضى ، بأبي العطشان حتّى مضى

*ஸைனப் அவர்களின் சோகநிலை, எதிரிகளின் கண்களிலும் கண்ணீரை கசிய வைத்தது. அங்கிருந்து எழுந்து வந்த அவர்கள், இமாம் ஸைனுல் ஆபிதீன் அவர்களை அணுகி, "என் சகோதரரின் மகனே! உங்களது நோய் அதிகமாகிக் கொண்டே செல்கிறது. உங்களது உயிரும் பிரிந்து விடுமோ என நான் அஞ்சுகின்றேன். ஆகவே, உங்களுக்காகவும், எமக்காகவும் அல்லாஹ்விடம் நான் பிரார்த்தனை செய்கின்றேன். நீங்களும் பிரார்த்தனை செய்து கொள்ளுங்கள்" எனக் கூறினார்கள்.*

*இமாம் ஸைனுல் ஆபிதீன் அவர்கள் இளைஞராக இருந்தார்கள். ஆயினும், அன்றைய நாள், அவர்கள் மிகக் கடுமையாக நோயுற்றிருந்ததனால், அவர்களால் தந்தையுடன் இணைந்து யுத்தத்தில் ஈடுபட முடியாது போய் விட்டது. ஆனாலும், அது நன்மையாகவே அமைந்தது. ஏனெனில், இமாம் ஸைனுல் ஆபிதீன் அவர்களிலிருந்தே நபிகளாரின் பரம்பரை*

தொடர்ந்து வருகின்றது. அன்று அவர்கள் யுத்தத்தில் ஈடுபட்டிருந்தால், அவர்கள் கொலை செய்யப்பட்டிருப்பார்கள். அதனால், நபிகளாரின் பரம்பரை இருப்பு உலகில் இல்லாது போயிருக்கலாம். எனவேதான், அல்லாஹ் இத்தகைய ஒரு ஏற்பாட்டினை ஏற்படுத்தி இமாம் ஸைனுல் ஆபிதீன் அவர்களைப் பாதுகாத்தான். எனினும், அவர்களைக் கொலை செய்து விடுவதற்காக பல திட்டங்களை எதிரிகள் மேற்கொண்டனர். குறிப்பாக, உபைதுல்லாஹ்வும் பல முயற்சிகளை மேற்கொண்டான். அப்போதெல்லாம் வீரமங்கை ஹஸ்ரத் பீபி ஸைனப் அவர்கள், அவருக்குத துணையாக இருந்து அவரைப் பாதுகாத்தார்கள்.

ولا حول ولا قوة إلا بالله العلي العظيم

## II. பீபி ஸைனபின் வீர உரை

அன்னை உம்முஜமன் எனும் பெண்மணி, ஹஸ்ரத் கதீஜா (ரழி) அவர்களின் அரவணைப்பில், நபி (ஸல்) அவர்களின் அன்புக்குப் பாத்திரமானவராக வாழ்ந்து வந்தவர்கள். நபிகளாரிடமிருந்து பல ஹதீதுகளையும் அவர்கள் அறிந்து அறிவித்துள்ளார்கள். அவர்கள் அறிவித்த ஹதீதுகளில் பெரும்பாலானவை அஹ்லுல் பைத்தினர் பற்றியதாகவே அமைந்திருந்தன.

அந்த ஹதீதுகளை உம்முஜமன் அவர்கள், அலியின் புதல்வி பீபி ஸைனப் அவர்களுக்கும் கற்றுக் கொடுத்தார்கள். அவற்றை ஹஸ்ரத் அலி அவர்களும் உறுதிப்படுத்தியிருந்தார்கள். ஸைனப் அவர்கள் அஹ்லுல் பைத்தினர் பற்றிய முழுமையான அறிவும், ஞானமும் மிக்கவர்களாகத் திழ்வதற்கு இது வழிவகுத்தது.

கர்பலா நிகழ்வின் பின், ஸைனப் அவர்கள், ஓய்ந்திருக்கவில்லை. இமாம் ஹுஸைன் காலமாகிவிட்டார் என்று சோர்ந்து ஒதுங்கி விடவில்லை. மாறாக, தமது இலட்சியங்களையும், குறிக்கோள்களையும், உரிமைகளையும் அடைந்து கொள்வதற்கான பிரயத்தனத்தில் அவர்கள்

ஸைனுல் ஆபிதீன் அவர்களுக்கு தாம் கற்று வைத்திருந்த ஹதீதுகளையும், ஞானங்களையும் கற்றுக் கொடுத்தார்கள்.

கர்பலா நிழ்வு முடிவுற்ற பின், இமாம் ஸைனுல் ஆபிதீனை நோக்கிய ஸைனப் அவர்கள், "என் சகோதரரின் மகனே! எமது பாட்டனாரின் மூலம் நாம் அறிகின்றோம். துண்டமாக்கப்பட்ட நிலையிலேயே ஹுஸைனின் உடலை நாம் காணும் இந்த இடம்தான், அவர்களது அடக்கஸ்தலமாகவும், ஞாபகார்த்த ஸ்தலமாகவும் அமையும்" எனக் கூறினார்கள்.

சண்டையின் பின், கைதிகளாக்கப்பட்டிருந்த இமாம் ஹுஸைனின் குடும்பத்தினர்களை நஜப் எனும் நகருக்கு அழைத்துச் செல்வதற்கு எதிரிப்படையினர் தயாராகினர். அவர்களது வெற்றிக்களிப்பும், ஆரவாரமும் விண்ணை முட்டியது. கேலிச்சிரிப்புகளும், கெக்களிப்புகளும் காதுகளை அடைத்தன. முஹர்ரம் ஒன்பதாம் நாளிலிருந்து சற்றும் தூக்கமின்றி சோகத்தில் மூழ்கித் திளைத்திருந்த பீபி ஸைனப் நாயகி அவர்கள், களியாட்டத்தில் ஈடுபட்டிருந்த அப்படையினரை நோக்கி வீராவேசத்தோடு முழக்கமிட்டார்கள். தமது உரிமைகளையும், எசீத் படையினரின் முறையற்ற வக்கிரச் செயல்களையும் விதந்துரைத்து பகிரங்கமாகச் சாடினார்கள். தொடர்ந்து தாம் மேற்கொள்ள வேண்டிய செயற்பாடுகள் பற்றியும் அழுத்தமாகப் பிரஸ்தாபித்தார்கள்.

ஸைனப் அவர்களின் உரை அனைவரையும் உசுப்பி விட்டது. பல ஆண்டுகளுக்கு முன், ஹஸ்ரத் அலி அவர்கள் ஆற்றிய உரையின் செறிவையும், அழுத்தத்தையும் அவ் உரையில் அனைவரும் கண்டு மெய்மறந்து போனார்கள். ஓசையின்றி, ஆரவாரமின்றி அனைவரும் அவர்களின் உரையை கேட்டு மௌனித்து நின்றிருந்தார்கள் என்பதிலிருந்தே அவர்களது வீரத்தையும், விவேகத்தையும், ஆளுமைத் திறனையும் அறிந்து கொள்ள முடிகின்றது.

இதுபற்றி விபரிக்கும் ஓர் அறிவிப்பாளர், "இவ்வாறு ஆவேசமாக உரைநிகழ்த்திய வீரமுள்ள எப்பெண்ணையும் நான் காணவில்லை" என்று கூறி ஸைனபின் ஆற்றலை வியந்து ஆச்சரியமுறுகின்றார்.

# 12. ஷுஹதாக்களின் வரிசையில் ஹுர், அபுல்பழ்ல்

*ஹுர் இப்னு எசீத் அர்ரியாஹி, இமாம் ஹுஸைனின் யதார்த்தங்களை நன்குணர்ந்து அவர்களின் பக்கம் தம் ஆதரவை வழங்கியவர். அவர்களுக்காக வாளேந்திப் போராடியவர். 'ஹுர்' என்றால் சுதந்திரமானவர் என்பது அர்த்தமாகும்.*

*கர்பலாவுக்கு அருகாமையில் ஓடிக் கொண்டிருந்த புராத் நதியின் மதுரமான தண்ணீரை, அவ்வழியால் செல்லும் சாதாரண மனிதர்கள், ஜவாய் மிருகங்கள், காட்டுப் பிராணிகள் எல்லாம் அருந்திச் செல்லும் போது, உலகத் தூதர் நபி (ஸல்) அவர்களின் பரிசுத்த உறவினர்கள் அதிலிருந்து தண்ணீர் அருந்த முடியாது, தடை விதிக்கப்பட்டிருந்ததை கடுமையாக்க கண்டித்த ஹுர், அதனை எதிர்த்து, இமாம் ஹுஸைனுக்கு வெற்றி கிடைக்க வேண்டும் என்ற பேராவலில் உமையாக்களுக்கு எதிராக ஆவேசமாக வாளேந்திப் போரிட்டார்.*

*"மீனின் செதில் போன்று பளபளத்து மின்னிக் கொண்டிருக்கக் கூடிய இந்த புராத் நதியின் தண்ணீரிலிருந்து நபிகளாரின் குடும்பத்தினருக்கு நீரருந்த அனுமதிக்க மறுக்கிறீர்களா?" என வீரமுழக்கமிட்டவாறு ஆவேசமாகக் களம் புகுந்து, எதிரிகள் பலரை தாக்கியழித்தார்கள். எனினும், எதிரிகளின் கூட்டிணைந்த தாக்குதலுக்கு ஈடுகொடுக்க முடியாது, காயம்பட்டுக் கீழே விழுந்து ஷஹீதாகினார்.*

*இமாம் ஹுஸைன் அவர்கள், ஹுர்ரின் தலைப்பகுதியில் அமர்ந்தவாறு, "சுதந்திரமானவர்களில் சிறந்த சுதந்திரவாளர் ரியாஹியின் மகன் ஹுர் ஆவார்" என உணர்ச்சி பொங்கக் கூறிக் கண்ணீர் உகுத்தார்கள்.*

*இதுபோன்றே, அபுல்பழ்ல் அப்பாஸ் அவர்கள் ஷஹீதான போதும், இமாம் ஹுஸைன் அவர்கள் அவரது*

தலைப்பகுதியில் அமர்ந்திருந்து கவலையுற்றார்கள். 'பனூஹாஷிம்களின் சந்திரன்' என புகழ்ந்துரைக்கப்பட்ட அப்பாஸ் மீது இமாமவர்கள் மிக்க நேசமும், அன்பும் கொண்டிருந்தார்கள். "என் ஆன்மா உங்களுக்கு அர்ப்பணம்" என்று இமாமவர்களே அவரைப் பார்த்துக் கூறக் கூடியவாறு அவர் மீதான அன்பு இமாமவர்களிடம் மேலோங்கிக் காணப்பட்டது.

அபுல்பழ்ல் அப்பாஸ் அவர்கள், இமாம் ஹுஸைனின் கட்டளைக்கிணங்க, தண்ணீர் கொண்டு வருவதற்காகப் புறப்பட்டார்கள். இடையில் வழிமறித்த கூலிப்படையினரையெல்லாம் துவம்சம் செய்து கொண்டே முன்னேறினார்கள். ஆயினும், புராத் நதிக்குச் சென்று குவளையில் தண்ணீரை அள்ளிய போது அவர்களது வலது கரம் துண்டிக்கபட்டது. குவளையை இடது கரத்தில் தாங்கிய போது இடது கரமும் துண்டிக்கப்பட்டது. பின் எதிரிகள் பலர் சூழ்ந்து கொண்டு தாக்கிய போது, அதனை சமாளிக்க முடியாமல் சிரமத்திற்குள்ளான அவர்கள், கீழே விழுந்து அவ்விடத்திலேயே ஷஹீதாகிப் போனார்கள். அவர்களது தலைப்பக்கமாக வந்தமர்ந்த இமாம் ஹுஸைன் அவர்கள், துண்டிக்கப்பட்ட அபுல்பழ்லின் கரங்களை கவலையுடன் பார்த்தார்கள். அவரது கண்ணிலும், தலையிலும் குத்திட்டு நின்றிருந்த கூரிய ஈட்டிகளையெல்லாம் மெல்லப் பிடுங்கியெடுத்து தூர வீசியெறிந்தார்கள். இமாமவர்களின் முகம் அப்பாஸின் கொலையைக் கண்ணுற்றதும் ஒடுங்கிப் போனது. அவரது இழப்பை விபரித்த அவர்கள், "தற்போது எனது இடுப்பு முறிந்து விட்டது. என் எண்ணச் சிந்தனைகளும் குறைந்து விட்டன" எனப் பகர்ந்தார்கள்.

الآن انكسر ظهري وقلت حيلتي

## 13. இமாம் ஹுஸைனின் இணையற்ற வீரம்.

கர்பலாக் களத்தில் இமாம் ஹுஸைன் அவர்கள்

காண்பித்த வீரம், அனைவரையும் அச்சத்திலும், வியப்பிலும் ஆழ்த்தியது. அவர்களைத் தாக்குவதற்காகச் சென்ற எதிரிகள் அனைவரும் பரத்தப்பட்ட பஞ்சுகளாக அங்குமிங்கும் சிதறியோடினர். சிங்கத்தைக் கண்ட சிறுநரிக்கூட்டம் போல் திக்கொன்றும் திசையொன்றுமாய் பரந்தோடினர்.

இமாமவர்களின் இவ்வீர சாகசத்தைக் கண்ட எதிரிப்படையின் தளபதி உமர் இப்னு ஸஅத், "அவரது தந்தையின் ஆன்மா அவரிலே குடிகொண்டிருக்கிறது" என்று வியந்து கூறினான். ஏனெனில், ஹுஸைனின் தந்தையான ஹஸ்ரத் அலி அவர்கள் புகழ்பெற்ற மிகப் பெரும் வீரராக இருந்தார்கள் என்பது அனைவரும் அறிந்ததே.

இமாமவர்களை போராடி வெல்ல முடியாது என்றுணர்ந்த எதிரிகள், தூரநின்று கற்களையும் ஈட்டிகளையும் எறிந்து இமாமவர்களை பலவீனப்படுத்தி, அதன் பின் அவர்களை இலகுவாகக் கொன்று விடலாம் எனத் திட்டமிட்டனர். ஆயினும், இமாமவர்களோ தமது வீரத்திலும், போராட்டத்திலும் சற்றும் சடைவுறாது ஆவேசமாகப் போரிட்டுக் கொண்டிருந்தார்கள்.

தமது நண்பர்கள், குடும்பத்தினர்கள், உறவினர்கள் என பலரையும் இழந்து உளரீதியாக பாதிப்புற்றிருக்கக் கூடிய ஒருவரால் இத்தகைய வீராவேசத்துடன் போராட முடியுமா என அனைவரும் அதிசயித்து நின்றனர்.

இமாம் ஹுஸைன் அவர்கள் தமக்கென ஏற்படுத்திக் கொண்ட ஒரு மையப் புள்ளியில் நின்றவாறே போர் செய்து கொண்டிருந்தார்கள். அது கூடாரத்திற்கு சற்று அண்மையில் இருந்ததால், அவர்களது நிலையையும், இருப்பையும் உள்ளே இருந்த பெண்களினாலும், குடும்பத்தினர்களினாலும் உணர்ந்து கொள்ள வசதியாக இருந்தது. இந்நிலையில் இமாம் ஹுஸைன் அவர்கள் எதிரிகள் பலரை வெட்டிச் சாய்த்து விட்டு, இரண்டாம் முறையாக கூடாரத்திற்கு வந்து, அனைவரையும் சந்தித்து மீண்டும் விடைபெற்றுச் சென்றார்கள்.

எதிரிகள் அவர்களை சூழ்ந்து நின்று ஆவேசமாகத் தாக்கத் தொடங்கினர். அவர்களுக்கு ஈடுகொடுத்த இமாமவர்கள்,

தமது பெற்றோர் மீது இவர்களுக்கு நல்லபிப்பிராயம் இருக்கும் என்றெண்ணியவர்களாக, "உமையாக்களே! நான் அலியின் புதல்வர்!" என்று சத்தமிட்டார்கள். இந்த சத்தம் கூடாரத்தினுள் இருந்த அனைவருக்கும் கேட்டது. எதிரிகளோ, ஹுஸைனின் கோஷத்தை சற்றும் பொருட்படுத்தாமல் தொடர்ந்தும் தாக்கினார்கள்.

மீண்டும் இமாமவர்கள், "உமையாக்களே! நான் பாத்திமாவின் புத்திரர்" என்று சத்தமிட்டார்கள். இதுவும் கூடாரத்தினுள் இருந்த அனைவருக்கும் கேட்டது. எதிரிகளோ அதனையும் பொருட்படுத்தாது தொடர்ந்தும் தாக்கினர். இமாமவர்களின் மூன்றாவது சத்தம் ஒலிக்கும் என கூடாரத்தினுள் இருந்த பெண்கள் அனைவரும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். ஆனால், ஹுஸைனின் குரல் ஒலிக்கவில்லை. அவர்களது வீரமுழக்கமோ, சத்தமோ இன்றி, எதிரிப்படையினரின் கெக்களிப்புகளும், கேலிச்சிரிப்புகளுமே மேலோங்கி ஒலித்தன. பதைபதைத்த நெஞ்சுடன் அனைவரும் அச்சத்திற்குள்ளாகிப் போயிருந்த சந்தர்ப்பத்திலே, இமாமவர்களின் குதிரையின் கனைப்பொலி கேட்டு வெளியே வந்து பார்த்தார்கள். அம்புகள் பாய்ந்து, இரத்தக் கறைபடிந்து வந்திருந்த குதிரையைக் கண்டதும் ஹுஸைன் கொலை செய்யப்பட்டுவிட்டதை அறிந்து கொண்ட அவர்கள் அதன் கழுத்தைப் பிடித்தவாறு கதறியழத் தொடங்கினார்கள்.

ولا حول ولا قوة إلا بالله العلي العظيم

## 14. இறுதி மூச்சுவரை ஈமானில் இமயமாய் நின்ற இமாம் ஹுஸைன் அவர்கள்.

இமாம் ஹுஸைன் அவர்கள் எதிரிகளுடன் போராடி இறுதியில் நெஞ்சைத் துளைத்த ஈட்டிகளுடன் தரையிலே வீழ்ந்தார்கள். அவர்களால் எழுந்து நிற்க முடியவில்லை. கால்களும், கைகளும் தளர்ந்து போய்விட்டிருந்தன. கணிசமான அளவு இரத்தம் ஓடிவிட்டிருந்ததனால், உடல் ரீதியாக பலவீனமுற்றுப் போனார்கள்.

இந்நிலையிலே அவர்களை அவதானித்த சில

*ஹுசைன் தந்திரோபாயமாகக் கீழே வீழ்ந்து கிடக்கிறார். அவர் பலவீனமுற்று விட்டார் என எண்ணி யாராவது அருகாமையில் சென்றால் எதிர்த்துத் தாக்குவதற்காகவே இவ்வாறு பாசாங்கு செய்கின்றார் என்று கோழைத்தனமாக எண்ணங் கொண்டனர். எனவே, இதனைப் பரீட்சிப்பதற்காக இமாமவர்களின் குடும்பத்தினர் இருந்த கூடாரங்களைத் தாக்கியழிக்க ஆரம்பித்தனர்.*

*இதனைக் கண்டு, துடித்துப் போன இமாமவர்கள், எதிரிகளை நோக்கி சத்தமிட்டு, "உமையாக்களே! உங்களுடன் போராடுவது நான். என்னுடன் போராடுவது நீங்கள். பெண்களை ஏன் வருத்துகின்றீர்கள். அவர்கள் உங்களுக்கு என்ன குற்றம் செய்தார்கள்?" எனப் பரிந்து வினவினார்கள்.*

أنا أقاتلكم وانتم تقاتلونني والنساء ليس عليهن جناح

*ஆனாலும், எசீதின் பசப்பு வார்த்தைகளில் மயங்கிப் போயிருந்த எதிரிகள், இமாமவர்களைத் தாக்கியதோடு மட்டுமல்லாமல், அவர்களது கழுத்தையும் துண்டித்தார்கள். அவர்களது குடும்பத்தினரையும் சிறைப்பிடித்து அலைக்கழித்தார்கள்.*

*இமாமவர்கள், தலைதுண்டிக்கப்பட்ட நிலையிலே மண்ணில் வீழ்ந்து கிடந்த போது, அவர்களை அண்மித்த ஒருவன், அவர்களது கைவிரலில் மோதிரம் ஒன்று இருப்பதைக் கண்டான். அதனைக் கழட்டி எடுத்துச் சென்று அரசவையில் காண்பித்தால் சன்மானம் கிடைக்கும் என எண்ணி, அந்த மோதிரத்தைக் கழட்டியெடுக்க முனைந்தான். ஆயினும், அது இலகுவாகக் கழட்ட முடியாதவாறு இருக்கவே, தனது வாளை உருவெடுத்து மோதிரம் அணிந்திருந்த அந்த விரலை வெட்டியெடுத்து, பின் மோதிரத்தைக் கழட்டியெடுத்துச் சென்றான்.*

*அன்றிரவு தூங்குகின்ற வேளையிலே அவன் ஒரு கனவு கண்டான். அதிலே ஹஸ்ரத் பாத்திமா அவர்கள், தமது மகன்*

*ஹுசைனின் உடலை மடியில் கிடத்தி வைத்துக்கொண்டு என் மகனே! என் மகனே! என அழுது கொண்டிருப்பதை கண்ணுற்றான்.*

## 15. அல்லாஹ்வின்பாதையில் அனைத்தையும் அர்ப்பணித்த இமாம் ஹுஸைன் அவர்கள்.

*நாம் எமது பிள்ளைகளை விரும்புகின்றோம். அவர்கள் மீது அன்பு கொண்டிருக்கின்றோம். அதனால் அவர்களுக்கு துன்பங்கள் நிகழ்வதை நாம் அனுமதிப்பதில்லை. எவ்வாறேனும அதனைத் தடுத்து விடுகின்றோம். அவவ்ாறாயின், இமாம் ஹுஸைன் அவர்கள் தமது பிள்ளைகள் மீது அன்பு கொண்டிருக்கவில்லையா?*

*நிச்சயமாக அவர்கள் தமது பிள்ளைகள் மீது அளவற்ற அன்பு கொண்டிருந்தார்கள். ஆயினும், தமது பிள்ளைகள் அனைவரையும் இமாமவர்கள் கர்பலாவில் பலியிட்டார்கள் என்பதையிட்டு பிள்ளைகள் மீதான அவர்களது அன்பையும், பாசத்தையும் சந்தேகப்படுவது சாத்தியமற்ற விடயமாகும். இது அண்ணளவில், இப்ராஹீம் (அலை) அவர்கள் தமது மகன் இஸ்மாயில் (அலை) அவர்களை பலியிட முனைந்த வரலாற்றுடன் தொடர்புடைய அம்சமாகக் கொள்ளப்பட வேண்டியதாகும்.*

*இமாம் ஹுஸைன் அவர்கள், கர்பலாவுக்கு வரும்போது தமது உறவினர்களையும் அழைத்து வந்தார்கள் என்பது அவர்களைப் பொறுத்தவரை பல்வேறு அர்த்தங்கள் பொதிந்த விடயமாகும். அவற்றை பூரணமாக விளங்கிக் கொள்ளும் மனோபக்குவத்தை வளர்த்துக் கொள்வது எம் அனைவர் மீதும் கடமையாகும்.*

*இமாம் ஹுஸைன் அவர்கள் கர்பலாவை வந்தடைந்த போது, தமது தலையை உயர்த்தி "நிச்சயமாக நாம் இறைவனிடமிருந்தே வந்தோம். அவனிடமே மீளச் செல்வோம்" என்ற இறைமறை வசனத்தை ஓதிக் காண்பித்தார்கள்.*

إنَّا لِلّٰهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُونَ

*இதனைக் கேட்ட அங்கிருந்த இமாம் ஹுஸைனின் புதல்வர் அலிஅக்பர் அவர்கள் தந்தையை நோக்கி, "என் அன்புத் தந்தையே! ஏன் இவ்வாறு கூறுகின்றீர்கள்?" என வினவினார்கள். அதற்கு இமாமவர்கள், "ஒரு கூட்டம் நகர்கின்றது, மரணம்தான் அவர்களை நகர்த்துகின்றது" என்று பதிலிறுத்தார்கள்.*

*அதுகேட்ட அலிஅக்பர் அவர்கள், "நாம் உண்மையின் பக்கம் இல்லையா?" என தவிப்புடன் வினவினார்கள். அதற்கு இமாமவர்கள், "என்னால் உமக்குரிய கூலியைத் தரமுடியாது. ஆயினும் உமக்குத் தகுமான கூலியை அல்லாஹ்வே தருவான்" என்று கூறினார்கள். இத்தகைய அன்புப் புதல்வரையும் இமாமவர்கள், மிகப் பரிதாபமான முறையில் கர்பலாத் திடலில் பறி கொடுத்துக் கவலையுற்றார்கள் என்பது வரலாற்றின் கறைபடிந்த அத்தியாயமாகும்.*

## இமாம் ஹுஸைன் அவர்களுக்கான விசேட பிரார்த்தனை.

السلام عليك يا ابا عبد الله ، وعلى الأرواح التي حلت بفنائك
وأناخت برحلك ، عليك مني سلام الله أبدا ما بقيت وبقي
الليل والنهار ، ولا جعله الله آخر العهد مني لزيارتكم

السلام على الحسين وعلى علي ابن الحسين
وعلى أولاد الحسين وعلى أصحاب الحسين

## இமாம் ஹுஸைனின் பொருட்டினால் அல்லாஹ்விடம் துஆ இறைஞ்சுவோம்.

*01. யாஅல்லாஹ்! இமாம் ஹுஸைனின் எழுச்சியின் உயிரோட்டத்தினை நாம் முழுமையாக அறியச் செய்வாயாக!*

*02. யாஅல்லாஹ்! இமாம் ஹுஸைனின் எழுச்சியின் ஒளியை எமதுள்ளத்திலும் ஏற்றி வைப்பாயாக!*

*03. யாஅல்லாஹ்! சோம்பல், பொடுபோக்கு, இயலாமை என்பவற்றிலிருந்து எமக்கு விடுதலையளிப்பாயாக!*

*04. யாஅல்லாஹ்! எப்போதும் ஈமானிய எழுச்சியையும், உயிரோட்டமுள்ள சமயப் பற்றுமிக்க வாழ்வையும் எமக்குத் தருவாயாக!*

*05. யாஅல்லாஹ்! உனது திருப்பொருத்தத்திற்காகவும், உனது சன்மார்க்கத்தின் உயர்வுக்காகவும் தமது உயிர், பொருள், ஆவியை தியாகம் செய்த நல்லடியார்களின் கூட்டத்திலே எம்மையும் ஆக்கியருள்வாயாக!*

*ஆமீன்.*